

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 17 Issue 7 February 2023 Rs.25
ஆண்டு 17 இதழ் 7 பிப்ரவரி 2023 ரூ.25

பிரபு திலக்
றஹீமா பைஸல்
சமஸ்
வைதீஸ்வரன்
மொப்பசான்
நாகரத்தினம் கிருஷ்ணா
தமிழ்நதி
பொ. கருணாகரமூர்த்தி
விட்டல்ராவ்
மதுரை சத்யா
சஞ்சயன்
ஸிந்துஜா
எஸ். செந்தில்குமார்
டி. கண்ணன்
த. மார்க்ஸ்
இந்திரா பார்த்தசாரதி

மீண்டும் சேது சமுத்திர திட்டம்

# 300 ஆண்டுகள் கனவு!

ஆண்டு 17 இதழ் 07



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி-2023 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்...

# மீண்டும் சேது சமுத்திரத் திட்டம்!

## பிரபு திலக்

தமிழ்நாட்டின் நீண்ட காலக் கனவுகளில் ஒன்றான சேது சமுத்திரத் திட்டம் பற்றிய உரையாடல் மீண்டும் உயிர் பெற்றிருக்கிறது. இந்த திட்டத்தை தாமதமின்றி நிறைவேற்ற ஒன்றிய அரசு முன்வர வேண்டும் என்று சட்டப்பேரவையில் தமிழ்நாடு முதலமைச்சர் மு.க. ஸ்டாலின் கொண்டுவந்த தனிநபர் தீர்மானம், காரசாரமான விவாதங்களுக்குப் பின்னர், அனைத்துக் கட்சி ஆதரவுடன் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டுள்ளது.

இந்தியாவின், குறிப்பாக தமிழ்நாட்டின் தனுஷ்கோடிக்கும் இலங்கையின் வடக்கு பகுதியில் உள்ள யாழ்ப்பாண குடாநாட்டுக்கும் இடையிலான கடல் பகுதியில் உள்ளது பாக்கு நீரிணை. இப்பகுதியில் கப்பல்கள் சென்றால் தரை தட்டும். அந்தளவு ஆழமற்ற பகுதி. இதனால், இந்தியாவின் மேற்கு பக்க துறைமுகங்களில் இருந்து கிழக்கு பக்க துறைமுகங்களுக்கு வரவேண்டிய கப்பல்கள் இலங்கையைச் சுற்றி வருகின்றன. இதனால் எரிபொருள் அதிக செலவாவதுடன், நேர விரயம் வேறு.

எனவே, இந்த ஆழமற்ற பகுதியைத் தோண்டி, பெரிய கப்பல்கள் செல்ல வழி செய்வதன் மூலம் இந்தியாவின் கிழக்கு - மேற்குக் கடற்கரை துறைமுகங்களை இணைக்கும் திட்டம்தான் சேது சமுத்திரத் திட்டம். இந்த திட்டம் செயல்படுத்தப்பட்டால் கன்னியாகுமரியிலிருந்து சென்னைக்கு வருவதற்கான தூரம் 755 கடல் மைல்களில் இருந்து 402 கடல் மைல்களாகக் குறையும். பயண நேரமும் எரிபொருள் செலவும் வெகுவாகக் குறையும்.



கிட்டதட்ட 300 ஆண்டுகளை நெருங்கிவிட்ட சரித்திரம் கொண்ட கனவு இது. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே இதற்கான பணிகள் தொடங்கிவிட்டது. பிரிட்டன் புவியியலாளர் மேஜர் ஜேம்ஸ் ரன்னெல் என்பவர் 1760களில் இலங்கையின் திருகோணமலையில் ஆய்வுகளை மேற்கொண்டார். அப்போது இலங்கைக்கும் இந்தியாவின் தென் பகுதிக்கும் இடையில் கடல் பகுதியில் இருந்த மணல் திட்டுகளைக் கவனித்தார். அது பற்றி ஆய்வு செய்து, இந்த இடத்தில் கடலுக்குள் தோண்டி கால்வாய் அமைப்பதன் மூலம் கப்பல்களைச் செலுத்த முடியுமென பரிந்துரை செய்தார்.

இதனையடுத்து, 1838இல் கடலுக்குள் கால்வாய் தோண்டும் வேலையை பிரிட்டீஷ் அரசாங்கம் தொடங்கியது. ஆனால், வேலை முடிந்த பின்னர் பார்த்தால் அந்தக் கால்வாய் வழியாக சிறிய கப்பல்கள் செல்ல முடிந்ததே தவிர, பெரிய கப்பல்கள் செல்ல முடியவில்லை. அதாவது, இன்னும் ஆழமாக தோண்ட வேண்டும் என்றானது. என்றாலும் நீண்ட காலம் அதற்கான முயற்சிகள் எடுக்கப்படாமல், அந்நிலையை தொடர்ந்தது.

அதன்பின்னர் 1860இல், கடல் வழிகளில் ஆர்வம் கொண்ட கிழக்கிந்தியக் கம்பெனியின் இந்தியக் கடற்படையில் பணியாற்றிய கமாண்டர் ஆல்ஃப்ரட் டன்டாஸ் டெய்லர் என்பவர், கால்வாய் தோண்டும் திட்டத்தை முன்வைத்தார். ஆனால், பெரிய திட்ட செலவு எனக்கூறி பிரிட்டிஷ் அரசு அதை பரிசீலிக்கவில்லை. அதன்பிறகு,

1861இல் டவுன்ஷென்ட் என்பவர் இந்தத் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும் என்றார். ஆனால், திட்டம் முன்னெடுக்கப்படவில்லை.

1862இல் ஒரு நாடாளுமன்றக் குழு அமைக்கப்பட்டு திட்டம் குறித்து ஆராயுமாறு உத்தரவிடப்பட்டது. அந்தக் குழு பரிந்துரையும் கிடப்பில் போடப்பட்டது.

1863இல் பாம்பனுக்கு விஜயம் செய்த அன்றைய சென்னை மாகாணத்தின் பொறுப்பு ஆளுநர் சர் வில்லியம் டானிசன்




பரிந்துரைத்ததும் செயல்படுத்தப்படவில்லை.

*1871*இல் ஸ்டோர்ட் என்பவர் ஒரு திட்டத்தை முன்வைத்தார். ஒன்றும் நடக்கவில்லை.

*1872* மார்ச்சில், நாடாளுமன்ற உறுப்பினராக இருந்த சர் எல்ஃபின்ஸ்டைன் இந்திய அரசின் செயலருக்கு எழுதிய கடிதம் விளைவாக, பொறியாளரான சர் ஜான் கோட் பாம்பனுக்கு செய்து ஒரு திட்டத்தை முன்வைத்தார். அவர் திட்டத்தை அப்போதைய சென்னை மாகாண அரசு ஏற்கவில்லை.

*1902*இல் சவுத் இந்தியன் ரயில்வே கம்பனி என்ற நிறுவனம் இந்தத் திட்டத்தைத் தனது பொறியாளர்களை வைத்து ஆய்வு செய்தது. ஆனாலும் திட்டம் மேற்கொண்டு நகரவில்லை.

*1922*இல் இந்திய அரசின் துறைமுகப் பொறியாளரான சர் ராபர்ட் பிரிஸ்டோ இந்தத் திட்டத்தை ஆய்வு செய்தார். நிதிப் பிரச்சினையால் அவரது யோசனையும் மேற்கொண்டு நகரவில்லை.

*1947*இல் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அதன்பின்னர் சுதந்திர இந்திய அரசும் இந்த திட்டத்தில் ஆர்வம் செலுத்தியது. *1955*இல் சர் ராமசாமி முதலியார் தலைமையில் சேது சமுத்திரத் திட்டக் குழு அமைக்கப்பட்டது. இந்த குழுவின் யோசனை அந்தளவிலேயே நின்றது.

*1964*இல் அன்றைய கப்பல் போக்குவரத்துத் துறை செயலர் நாகேந்திர சிங் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. மண்டபத்தில் கால்வாயை வெட்டுவதற்குப் பதிலாக தங்கச்சி மடம் பகுதியில் கால்வாயை அமைக்கலாம் என்றது இந்தக் குழு.

*1967*இல் தமிழ்நாட்டில் அண்ணா தலைமையில் திமுக ஆட்சிக்கு வந்தது. அண்ணாவின் கனவு திட்டமாக சேது சமுத்திர திட்டம் மாறியது. மீண்டும் இந்தத் திட்டம் குறித்து வலியுறுத்தப்பட்டது.

*1981*இல் துறைமுகங்களின் வளர்ச்சி ஆலோசகராக இருந்த எச்.ஆர். லட்சுமி நாராயணன் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டு, இந்தக் குழு *1983*இல் அன்றைய மதிப்பில் இந்தத் திட்டத்திற்கு *282* கோடி ரூபாய் ஆகுமென தெரிவித்தது.

திமுக அங்கம் வகித்த, வாஜ்பாய் பிரதமராக இருந்த தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி காலத்தில், *2000-2001*ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் இந்தத் திட்டம் குறித்து புதிதாக ஆய்வு நடத்த *4.8* கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டது.

*2004*இல் திமுக இடம்பெற்ற ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சியில் ஆய்வுகள் துரிதப்படுத்தப்பட்டது. *2005*ஆம் ஆண்டு பிரதமர் மன்மோகன் சிங் பணிகளைத் தொடங்கி வைத்தார். இந்தத் திட்டத்தில் ஷிப்பிங் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா, சென்னை துறைமுகம், தூத்துக்குடி துறைமுகம், பாரதீப் துறைமுகம், விசாகப்பட்டின துறைமுகம் ஆகியவை முதலீடு செய்தன. முதலீடுகளைப் பெற்று, திட்டத்தைச் செயல்படுத்த சேது சமுத்திரம் கார்ப்பரேஷன் லிமிட்டட் என்ற சிறுப்பு நிறுவனம் உருவாக்கப்பட்டது.

இந்நிலையில், உச்ச நீதிமன்றத்தின் இடைக்கால



தடை காரணமாக ஆடம் பாலம் பகுதியில் தோண்டும் பணிகள் நிறுத்தப்பட்டன. 2009 ஆம் ஆண்டு ஜூலை 27 ஆம் தேதி எல்லா இடங்களிலுமே தோண்டும் பணிகள் நிறுத்தப்பட்டன.

2008இல், திட்டத்தின் அம்சங்களை ஆராய்ந்து அறிக்கை அளிக்கும்படி டாடா எனர்ஜி ரிசர்ச் இன்ஸ்ட்டிடியூட்டின் இயக்குநர் ஜெனரலாக இருந்த ராஜேந்திர கே. பசௌரியின் தலைமையில் ஒரு குழுவை மத்திய அரசு அமைத்தது. இந்தத் திட்டம் சூழலியல் ரீதியிலோ நிதி ரீதியிலோ சரியான திட்டமல்ல எனத் தனது ஆய்வு முடிவுகளைச் சமர்ப்பித்தது பசௌரி குழு.

2013இல் பசௌரி குழுவின் அறிக்கையைப் புறக்கணித்துவிட்டு திட்டத்தைச் செயல்படுத்தப் போவதாக நீதிமன்றத்தில் ஒன்றிய அரசு தெரிவித்தது. ஆனால், வழக்கில் தீர்ப்பு வராததால், பணிகள் கிடப்பில் போடப்பட்டன.

சேது சமுத்திர திட்டம் செயல்படுத்தப்பட்டால் அப்பகுதியின் இயற்கை அமைப்பு பாதிக்கப்பட்டு சூழலியல் பாதிப்புகளை ஏற்படுத்தும் என்பது சுற்றுப்புறச் சூழல் ஆர்வலர்கள் கருத்து. ஆனால், வாஜ்பாய் ஆட்சி காலத்தில் இந்தத் திட்டத்தின் சுற்றுச்சூழல் பாதிப்பை ஆராய அமைக்கப்பட்ட 'நீரி' அமைப்பு, இந்தத் திட்டத்தால் சுற்றுச்சூழல் மிகக் குறைந்த அளவே பாதிக்கப்படும் என்று கூறியது.

மேலும், 'இந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடைப்பட்ட கடல் அகலம் 25 கி.மீ. முதல் 107 கி.மீ வரையுள்ளது. இதில் சேதுக் கால்வாய் அமையப்போவது 300 மீட்டர் அகலத்தில் மட்டுமே. அவ்வளவு பெரிய பரப்பில் இது மிக சிறிய அகலமே. 12.8 மீட்டர் ஆழம் வெட்டுவார்கள். இதில் சரசரியாக 8 முதல் 10 மீட்டர் ஆழம் கடலில் உள்ளது., எனவே, மேற்கொண்டு வெட்டும் ஆழமும் அதற்கு ஏற்றார் போல குறையும். இதனால், கடல் அடியில் மிகப்பெரிய பாதிப்பு வராது' என்றும் தெரிவிக்கப்பட்டது.

இன்னொரு பக்கம் பாக் நீரிணையில் உள்ள மணல் திட்டு ராமர் அமைத்த பாலம்; அதை இடிக்கக் கூடாது என்பது இந்து மதத்தைச் சேர்ந்த சேது கால்வாய் எதிர்ப்பாளர்களின் கருத்து. இதனால், சேது கால்வாயை புராதான சின்னமாக அறிவிக்க வேண்டும் என்று பாஜக மூத்த தலைவர் சுப்பிரமணியன் சுவாமி வழக்கு தொடர்ந்துள்ளதும் அந்த வழக்கு நிலுவையில் உள்ளதும் குறிப்பிடத்தக்கது.

ஆனால், சமீபத்தில், பாக் நீரிணை பகுதியில் உள்ள நிலப்பகுதி மனிதர்களால் கட்டப்பட்டதா என்பது குறித்துத் தெளிவான தகவல்கள் இல்லையென ஒன்றிய பாஜக அரசு தெரிவித்தது. இதையடுத்தே, மீண்டும் சேது சமுத்திரத் திட்டத்திற்கான கோரிக்கையை தமிழ்நாடு அரசு முன்வைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

சேது சமுத்திர திட்டம் தொடர்பான தனித் தீர்மானத்தை, தமிழ்நாடு சட்டப்பேரவையில் கொண்டு வந்து பேசிய முதலமைச்சர் மு.க. ஸ்டாலின், "தமிழ்நாட்டின் பொருளாதாரத்தை தலைநிமிர, தென் மாவட்டங்களைச் செழிக்க வைக்கக்கூடிய திட்டம்" என கூறியது குறிப்பிடத்தக்கது.

த.மா.க தலைவர் வாசன், "சேது சமுத்திரத் திட்டம் தமிழ்நாட்டுக்கு மட்டுமல்ல, இந்திய கடல்வழி போக்குவரத்துக்கும் பயனுள்ளதாக, பாதுகாப்பானதாக அமையும்" என்று கூறியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

எப்படியோ, இந்த திட்டம் மீண்டும் செயல்படுத்தப்பட்டு, அதனால் தமிழ்நாடும் இந்தியாவும் பலனடைந்தால் நல்லது.●

# ரஹீமா பைஸல் கவிதைகள்



## தலைகீழாய் தொங்கும் ஷைத்தானின் மாளிகை

விடுமுறைக்கு வந்த
வசந்த காலப் பறவைகள் கிளம்பிவிட்டன

மழைக் காளான்கள்
தோதான தரிப்பிடங்களில் பூக்கின்றன

மனிதர்கள் மாறிவிட்டார்கள்
இன்னும் சிலர்
சிறுகச் சிறுக மாறுகிறார்கள்

கொஞ்சம் என சொல்ல இயலாது
மிக
துயரமான காலம் நமக்கிது

வெள்ளிகள் பூத்த ஒரு இரவில்
இரகசியமாய்க் கிளம்பிய படகு கவிழ்ந்திருக்கிறது
சடலங்கள் நடுக்கடலில் மிதக்கின்றன
கனவுகளைப் போல

நாளை அல்லது மறுநாள் அவை
எங்காவது கரையொதுங்கக்கூடும்

நாட்டுச் செய்திகளை
அடிக்கடி கேட்காமல் இருப்பதும்
படிக்காமல் இருப்பதும்
நம் ஆரோக்கியத்துக்கு நல்லது என
நான் நம்புகிறேன்..

மகிழ்ச்சியைக் கொண்டாடிய
நமது வகுப்பறைகள்
எப்போது வேண்டுமானாலும் கைவிடப்படலாம்
அரச பள்ளிகளில் படிப்பு
ஆடம்பர செலவாக மாறியிருக்கிறது
பெற்றோருக்கு

ஊர்த் தெருவின் மறைவிடங்களில்
போதைப் பொருள் வியாபாரம் களைகட்டுகிறது
இந்த அடர் இருளில்
இந்த சீரழிவின் பாழுங்கிணற்றில் இருந்து மீள
நமக்கு
இன்னும் பல நூற்றாண்டுகள் தேவைப்படலாம்

## பனி வெயில் மற்றும் மழை

பால்வெண்மை பளிங்கு பனிப்பாறைகள்
கரைந்தோடி தேய்கின்றன

இந்தக் குளிர் வழமைக்கு மாறான
மாயா ஜாலங்களைக்கொண்டது.

வெப்பமான நிலத்தின்
மழைக் காலம் மருவியிருக்கிறது
குளிர் நிலத்தின்
பனிக்காலத்தைப் போல
நடு நடுங்கச்செய்கிறது

அகோரமாக எரிக்கிறது
வெயில் காலம்
வரலாற்றை மாற்றுகிறது மழைக்காலம்

இன்றைய வானிலையால்
சூழ்ந்திருக்கும் பருவங்கள்
நம் காலநிலையின் மீதும்
காலத்தின் மீதும்
சிவப்பு அபாய விளக்காக மின்னுகிறது

இந்த நிலம்
கரைந்த பனிப்பாறையின் பெரு வெள்ளத்தில்
ஒரு நாள்
காணாமல் போகும் என்பது
கதை அல்ல

மனிதர்கள் அறியாமையின் பெயரில் நிகழ்த்தும்
அனைத்தும்
மறுபடியும்
மனிதர்களையே சேரும் ●

# தமிழ்ப் பார்வையில் சர்வதேசம்

## சமஸ்

கிழக்கும் மேற்கும் - மு. இராமனாதன்; விலை: ரூ. 290; வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோயில் - 629001; தொலைபேசி: +914652278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

பத்திரிகையில் பணி நிமித்தம் கட்டுரைகளை வாசிப்பதானது சள்ளைபிடித்த வேலை. வாசிப்பில் எவ்வளவு ஆர்வம் உள்ளவரையும் அது இயந்திரம் ஆக்கிவிடும்.



நான், 'தி இந்து' தமிழ் நாளிதழின் ஆசிரியர் குழுவில் இருந்த காலகட்டத்தில் அன்றாடம் நூறுக்குக் குறையாமல் கட்டுரைகள் தேர்வுக்காக வரும். அணியினர் அவற்றில் சில பத்துக் கட்டுரைகளைத் தேர்ந்தெடுப்பார்கள். அவற்றிலிருந்து அடுத்த கட்டத் தேர்வை நான் மேற்கொள்ள வேண்டும். இந்த ஓட்டத்தில் நல்ல எழுத்தைக் காட்டிலும் பல மடங்கு மோசமான எழுத்துகளை வேறு வழியின்றி எல்லோருமே வாசிக்க வேண்டியிருக்கும்.

இப்படி அன்றாடம் பத்தாயிரம் சொற்களுக்குக் குறையாமல் வாசிப்பதும் தேர்ந்தெடுக்கப்படும் கட்டுரைகளைப் பக்கவடிவமைப்பின் அளவுக்கேற்பச் சுருக்குவதும் படைப்புக்குச் சேதாரம் நிகழாத வண்ணம் திருத்திச் செம்மையாக்குவதுமான பணி ரத்தத்தை உறிஞ்சி, மண்டையிலிருந்து ஆவியை வெளியே அனுப்பிவிடக்கூடியது.

படைப்புகளைத் திருத்துவோருக்கு நம்மூரில் கிடைக்கும் வசையும் சாபமும் கொஞ்சநஞ்சம் இல்லை. பத்திரிகைகளில் பணியாற்றுவோருக்கு எல்லோருடைய எழுத்திலும் வலியக் கைவைக்கும் வியாதி இருக்கும் என்ற எண்ணம்கூட இங்கே சிலருக்கு உண்டு. நிதர்சனம் என்னவென்றால், திருத்தம் தேவைப்படாத அளவுக்கு நேர்த்தியாக எழுதப்பட்டு வரும் பிரதிகளைக் கண்டால், அப்படி அனுப்பும் எழுத்தாளர்கள் வாழும் திசை நோக்கிப் பத்திரிகையாளர்கள் கும்பிடு போடுவார்கள். எந்த ஒரு தீவிரமான விஷயத்தையும் லட்சக்கணக்கான வாசகர்களை மனதில் கொண்டு, குறிப்பிட்ட வரையறைகளுக்குள் சுருக்கமாகவும் சுவாரஸ்யமாகவும் எழுதுவது பெரும் சவால். தேர்ந்த வெகுஜனப் பத்திரிகை எழுத்தும் கலை வெளிப்பாடுதான்.



பலர் ஒரு விஷயத்தை அன்றைய காலப் பொருத்தத்தில் அணுகி, எப்படியோ தன் கருத்துகள் வெளிப்பட்டால் போதும் என்கிற எண்ணத்தோடு எழுதும்போது இப்படி எழுதப்படும் கட்டுரைகள் அன்றைய நாளின் தேவையையும் 'ஓர் அறிக்கை' எனும் வடிவத்தையும் தாண்டுவது இல்லை. இத்தகு எழுத்துகள் பத்திரிகையில் வாசிக்கப்பட்ட வேகத்தில் கடாசப்படுவதாக அமைந்துவிடும். சிலர் அதே விஷயங்களைத் தொலைநோக்கோடு அணுகி, கட்டுரைகளின் வழி தாம் சொல்லவரும் கருத்துகளோடு, வெளிப்படுத்தும் மொழியிலும் தொனியிலும் கூடவே கவனம் செலுத்துகையில் அடுத்த கட்டத்தை நோக்கி அவர்களுடைய எழுத்து பயணப்படுகிறது. நண்பர் மு. இராமனாதன் இந்த ரகம்.

மோடி அரசு பெரும் ஆரவாரத்துடன் 'இந்தியாவில் உருவாக்குவோம்' கொள்கையை அறிவித்த சமயம். ஓர் அறிவிப்பின் வழி உலகின் தொழிற்சாலை எனும் இடத்தை நமதாக்கிவிடலாம் எனும் பாவனையை அது உருவாக்க முனைந்தது. அப்போது 'உலகின் தொழிற்சாலை ஆகுமா இந்தியா?' என்ற கட்டுரையை அனுப்பியிருந்தார் ராமனாதன். உற்பத்தித் துறையில் சீனாவை விஞ்சும் இலக்கு உண்மையாகவே இந்திய அரசுக்கு இருக்கும் என்றால், எப்படியெல்லாம் அதற்கு இந்தியா தயாராக வேண்டும்; எவ்வளவு காலம் திட்டமிட்டு உழைக்க வேண்டும்; குறிப்பாக மனிதவளத் துறையை எப்படியானதாகச் சிந்திக்க வேண்டும் என்று அந்தக் கட்டுரையில்



விவரித்திருந்தார்.

மோடியின் மீதோ அரசின் மீதோ வெற்றுத் தாக்குதல்கள் எதுவும் இல்லை. சொல்லப்போனால், திட்டத்தின் உள் அரசியலையெல்லாம் அவர் பொருட்படுத்தக்கூட இல்லை. நேர்மறையான பாதை யிலேயே தரவுகள் அடிப்படையிலான தர்க்கங்கள் வழி இந்திய ஆளும் வர்க்கமானது வெளிப்படுத்தும் ஒவ்வோர் அபத்தத்தையும் அம்பலப்படுத்தியிருந்தார். இந்திய அரசு அப்போது புல்லட் ரயில் திட்டத்தில் தனக்குள்ள ஆர்வத்தையும் வெளிப்படுத்தியிருந்தது. இராமனாதன் தன் கட்டுரையில் சொல்லியிருந்தார், *"சென்னை மெட்ரோ ரயிலின் சரிபாதித் தடம் சுரங்கப் பாதைகளால் அமைக்கப்படுகிறது. நிலத்தின் அடியில் 30 அடிக்கும் கீழே சுரங்கங்களை அமைக்கும் பணியில் ஈடுபடுத்துவதற்காக 12 இயந்திரங்களை வெளியிலிருந்து நாம் தருவித்திருக்கிறோம். இவற்றில் ஒரு இயந்திரம் அமெரிக்க நிறுவனத்தினுடையது, மூன்று சீன நிறுவனத்தினுடையது, எட்டு ஜெர்மன் நிறுவனத்தினுடையது; ஆனால், இந்த இயந்திரங்களுக்குள் ஓர் ஒற்றுமை உண்டு. எல்லாமே சீனத்தில் உருவாக்கப்பட்டவை."*

எவ்வளவு அநாயசமாக இராமனாதனால் ஒரு விஷயத்தின் அடியாழத்துக்குச் செல்ல முடியும் என்பதை மேலே உள்ள பத்தியின் மூலம் நாம் புரிந்துகொள்ள முடியும். அடுத்தடுத்த வரிகளிலேயே இராமனாதன் சொல்வார், *"இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் 74% பேர். சீனாவில் இது 95%. 1990களிலேயே சீனாவில் கல்வி கற்றோர் விகிதம் இந்தியாவின் தற்போதைய நிலையைக் காட்டிலும் உயர்வாக இருந்தது. இந்தியாவில் சுமார் 29 கோடிப் பேருக்கு எழுத்தறிவு இல்லை. உலகில் எழுத்தறிவற்றோரில் மூன்றில் ஒருவர் இந்தியர். தவிர, இந்தியாவின் கல்வித் தரமும் கவலைக்குரியதாக இருக்கிறது. ஐந்தாம் வகுப்பு மாணவர்களில் பெரும்பான்மையினரால் இரண்டிலக்கக் கழித்தல் கணக்கைக்கூடப் போட முடியவில்லை. பொதுச் சுகாதாரமும் இந்தியாவில் பலவீனமாகத்தான் இருக்கிறது. ஒரு சராசரி சீனர் சராசரி இந்தியரைக் காட்டிலும் 11 ஆண்டுகள் கூடுதலாக வாழ்கிறார். தன்னுடைய உள்நாட்டு உற்பத்தி மதிப்பில் 2.7% தொகையைச்சுகாதாரத்துக்காகச்சீனாசெலவிடுகிறது; இந்தியாவில் இது 1.2%."*

இராமனாதன் வெறும் தரவுகளை அடுக்கி, கட்டுரைகளை உருவாக்குபவர் அல்லர். நடைமுறைக் கதைகள் அதில் இருக்கும். கூடவே தரவுகள் இருக்கும். பிரச்சினையின் அடிநாதம் கட்டுரையில் சுட்டப்படுவதோடு, தீர்வுகளுக்கான முன்மொழிவுகளும் இருக்கும். நல்லெண்ணமும் நல்மதிப்பீடுகளும் கட்டுரைகளைக் கோத்துப் பிணைத்திருக்கும். நாங்கள் பத்திரிகை அணியினர் வேடிக்கையாக எங்களுக்குள் பேசிக்கொள்வோம், "இராமனாதன் எழுத்திலும் பொறியாளர், எப்படி யிருக்கிறது பாருங்கள் கலவையும் கட்டமைப்பும்!"

இராமனாதனிடம் எனக்குப் பிடித்தமானது அவருடைய எளிமையும் கச்சிதமும்!

கலவையான வளர் பின்னணி இராமனாதனுக்கு அமைந்தது அவருடைய பார்வைக்கு முக்கியமான காரணம் என்று எண்ணுகிறேன். கிராமப்புறப் பின்னணியில் அரியக்குடியில் பிறந்து வளர்ந்தார். பக்கத்தில் உள்ள நகரமான காரைக்குடி தனித்துவமான அடையாளங்களையும் பண்புகளையும் கொண்டது. பெரும் ஏற்றத்தையும் வீழ்ச்சியையும் பார்த்த தமிழ் நகரம் அது. தமிழ்நாட்டின் தொழில் உற்பத்தி நகரமான கோவையில் அவர் பொறியியல் பயின்றிருக்கிறார். பிற்பகுதியில் பன்மைத்துவப் பண்பாடுக்குப் பேர்போன சென்னை அவர் வாழ்வோடு கலந்துவிடுகிறது. கூடவே உற்ற துணையாக எப்போதும் இலக்கியத்தைக் கொண்டிருக்கிறார். தீவிரமான வாசகர். இத்தகு பின்னணியிலிருந்து, தன்னுடைய சொந்த சமூகத்தின் மீது ஆழ்ந்த அக்கறை கொண்ட ஒருவர் வெளிநாடுகளுக்குப் பணியாற்றச் செல்லும்போது, பல நாடுகளுக்கும் பயணிக்கும்போது அங்கெல்லாம் கிடைக்கும் அனுபவங்கள் எல்லாம் சேர்ந்து எத்தகைய பார்வையை உருவாக்கும்? அதைத்தான் இராமனாதனின் எழுத்துகளில், இந்த நூலில் நாம் பார்க்கிறோம்.

தமிழில் சர்வதேச விவகாரங்கள் தொடர்பான விவாதங்கள், உரையாடல்கள், பகிர்வுகள் மிகக் குறைவு. அதிலும் ஆழ்ந்த பார்வையும் சமநிலை நோக்கும் கொண்டவை மிக அரிது. கூடுதலாக இராமனாதன் எழுத்துகளுக்கு உள்ள தனித்துவம் என்னவென்றால்,

கால் பதித்த நாடுகள் தொடர்பான விவகாரங்களையே அவர் பெரும்பாலும் எழுதியிருக்கிறார்; நேரடி அனுபவங்களின் பின்னணி இந்த நூலுக்கு உள்ள பெரும் பலம். அதிலும் உலகின் பெரும் சக்திகளில் ஒன்றாகவும் நமக்கு முன் பெரும் சவாலாகவும் இன்று எழுந்து நிற்கும் சீனா தொடர்பில் அவர் எழுதியிருக்கும் கட்டுரைகள் முக்கியமானவை என்று கருதுகிறேன்.

வெளியான காலகட்டத்திலேயே இந்தக் கட்டுரைகளைப் பெருமளவில் வாசித்துவிட்டேன் என்றாலும், நூலாகத் தொகுக்கப்பட்ட பின் வாசித்தபோது எனக்கு ஏற்பட்ட எண்ணம் இதுதான்: 'இராமனாதன் ஏன் தனித்தனித் தலைப்புகளில் புத்தகம் எழுதக் கூடாது? சீனா தொடர்பில் மட்டுமே எவ்வளவு விஷயங்களைத் தொட்டிருக்கிறார்! சீனர்களின் உணவுப் பண்பாட்டிலிருந்து சீனர்களின் புலம்பெயர்வுப் பண்பாடுவரை எவ்வளவு விஷயங்களைப் போகிறபோக்கில் சொல்லிப்போகிறார்! எவ்வளவு விஷயங்களை நமக்குக் கற்றுக்கொடுக்கிறார்!'

வெளியுறவு சார்ந்து தமிழுக்குக் கிடைத்திருக்கும் அருமையான நூல் இது. சர்வதேச உறவுகளைத் தமிழ்ப் பார்வை கொண்டு பார்ப்பது இதன் தனித்துவம். இளையோருக்கு, குறிப்பாகக் குடிமைப் பணித் தேர்வு எழுதும் மாணவர்களுக்கு நல்ல வாசிப்புக்கான நூல் என்பதைத் தாண்டி, வழிகாட்டியாகவும் அமையும். வெகுசிலரே கால் பதித்திருக்கும் இந்தப் பாதையில் இதைத் தொடக்கமாகக் கொண்டு இராமனாதன் மேலும் பயணிப்பார்; விரிவான நூல்களை நமக்குக் கொடுப்பார் என்றால், தமிழ் வாசகர்கள் கொடுத்துவைத்தவர்கள்! ●

# வைதீஸ்வரன் கவிதைகள்

1

ஏன்?
உச்சி மாடிக்கு
உனைத் தேடிப் போனேன்ஞ்
விரிந்த கருநீலத்தில்
வெறும் நட்சத்திரங்கள் தான்
தளுக்கி மினுக்குகின்றன.
நிலவு தான் அறைகுறையாய்
அர்த்தமற்று வெறிக்கிறது..
வெறும் மல்லிகை
மணந்து வழிகிறது
நீயற்ற இந்த வேளையில்
இந்த தேவையற்ற ஏளனங்கள்
எனக்கு ஏன்?



2

ஒரு பூவை
உனக்குத் தர வேண்டும்
என்று தான் அலைகிறது மனசு
என்ன செய்ய?
உனைப் பார்க்கும்போதெல்லாம்
என் கையில் பூ இருப்பதில்லை
ஒரு பூவைப் பூத்துத் தரமுடியாமல்
செத்துக் கிடக்கின்றன செடிகள்
ஈரமற்ற போதிலும் பூமி
தன்னைப் புறக்கணித்த மானிடத்தை
பொறுமையுடன் சுமந்து
வெளியெங்கும் அலைகிறது
நான் ஒரு பூவுக்கு அலைவது போல்!!! ●

**“எஸ். வைதீஸ்வரன்”** <vydheesw@yahoo.com>

# தற்கொலைகள்

## கி.தெ. மொப்பசான்

### தமிழில்: நாகரத்தினம் கிருஷ்ணா

### ஓவியம்: Alex Gibbs

...ஜார்ஜ் லெக்ராண்டிற்கு

ஒரு சில செய்தித்தாள்களில், இதரச் செய்திகள் என்கிற பிரிவின்கீழ் ஒவ்வொருநாளும் இதுபோன்றதொரு செய்தி கட்டாயம் இடம்பெற்றிருக்கும்:

*'கடந்த புதன் கிழமை இரவு, ...வீதியில், கதவெண் 40இல் குடியிருப்புவாசிகள் நள்ளிரவில் அடுத்தடுத்து இரண்டுமுறை வெடித்த துப்பாக்கிச் சத்தம் கேட்டு விழித்திருக்கிறார்கள். சத்தம் மிஸ்டர் எக்ஸ் என்பவர் குடியிருப்பில் இருந்து வந்திருக்கிறது... பின்னர் கதவு திறக்கப்பட்டுப் பார்த்தபோது, அந்த அடுக்குமாடி குடியிருப்புவாசி ரத்த வெள்ளத்தில் கிடக்க, அவர் கைப்பிடியில் தற்கொலைக்கு உபயோகித்த கைத்துப்பாக்கி.'*

'திருவாளர் Xக்கு வயது ஐம்பத்தேழு, வசதியான வாழ்க்கைக்குப்போதுமான வருமானம்இருந்துள்ளது. எனவே, குறையற்ற மகிழ்ச்சியான வாழ்க்கை. இந்நிலையில் அவர் இப்படியொரு முடிவை எடுத்தக் காரணமென்ன என்பது விளங்காதப் புதிர்.'

கடுமையான துயரங்கள், நெஞ்சில் ஏற்பட்டக் காயம், ஒளித்து வைத்த ஏமாற்றங்கள்,வாட்டியகவலைகள்இவற்றில் எவை அல்லது எது, சந்தோஷமான வாழ்க்கைக்குரிய வருவாயிருந்தும் இதுபோன்றமனிதர்களை தற்கொலைக்குத் தூண்டி இருக்கக்கூடும்? என்ற கேள்வி எழுகிறது. பதிலைத் தேடுகிறோம்: காதல் தோல்வியாக இருக்கலாமென கற்பனை செய்ய முடிகிறது; பின்னர் பணம் ஒரு பிரச்சினையாக இருந்திருக்குமோ என்கிற சந்தேகம் எழுகிறது; இறுதியில் திட்டவட்டமாக எதையும் அறியமுடியாதபோது, இப்படியான மரணங்களுக்கென்று நம்மிடம் இருக்கவே இருக்கின்றன 'மர்மம்' என்ற வார்த்தை.





இப்படி காரணமின்றி தற்கொலை செய்துகொண்ட ஒருவரின் மேசையிலிருந்து கடிதமொன்று கிடைத்தது. தோட்டாக்கள் நிரப்பிய துப்பாக்கி அருகே கைக்குக் கிடைத்த, கடைசியாகஎழுதப்பட்ட அக்கடிதம், சுவாரஸ்யமாக இருக்குமென்றும் தோன்றியது. மனிதரின் விரக்தியான இக்காரியத்திற்குப் பின்னே ஏதேனும் பெரும் விபரீதமான காரணங்கள் ஒளிந்திருக்குமோ என நினைக்க, அப்படி எதுவும் தகவலில்லை; பதிலாக அக்கடிதம் வாழ்க்கையில் ஓயாமல் படும் சிறுசிறு கஷ்டங்களை, கனவுகளைத் தொலைத்து துணையின்றி காலம்தள்ளிய ஒரு மானுட உயிருக்கு நேர்ந்த சேதங்களைச் சொல்வதாக இருந்தது. மேலும், இப்படியொருசோகமான முடிவுக்கு அக்கடிதம் கூறும் காரணத்தை புரிந்துகொள்ள நெஞ்சில் பதற்றமும் எளிதில் உணர்ச்சிவசப்படும் மனநிலையும் அவசியம்.

கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது இதுதான்..

'நள்ளிரவு. இக்கடிதத்தை எழுதி முடித்ததும், என்னுடலில் உயிர் தங்காது. ஏன்? அதற்குரிய காரணங்களைச் சொல்ல முயற்சிக்கிறேன். இவ்வரிகளை எனது மரணத்திற்குப் பிறகு பிறகு படிக்கின்றவர்களுக்காக அல்ல, எனக்காக. எனது பலவீனமான தைரியத்திற்குத் தெம்பூட்டிக்கொள்ளவும் - தள்ளிப்போடலாம் ஆனால், தவிர்க்கவியலாது என்கிற அபாயகரமான - இதன் தேவைக்கு என் மனதைத் திடப்படுத்திக்கொள்வதற்கும் என வைத்துக்கொள்ளலாம்.

எந்த ஒன்றையும் எளிதாக நம்புகிற பெற்றோர்களால் வளர்க்கப்பட்டவன் என்பதால் நானும் அப்படிபட்டவனாக இருந்தேன். வெகுகாலம் உயிர்வாழ்ந்த அந்நம்பிக்கைக் கனவு அண்மையில்தான் தனது கடைசி முகத்திரையைக் கிழித்துக்கொண்டது.



கடந்தசில ஆண்டுகளாகஏதோவொருவினோதம் எனக்குள் நிகழ்வது போன்றதொரு அனுபவம். வைகறை சூரியனைப் போல பிரகாசித்த கடந்தகால சம்பவங்கள் இன்றெனக்கு மங்கியவைப் போலத் தோற்றமளிக்கின்றன. அவற்றின் முக்கியத்துவத்தில் இன்று நான் காண்பதென்னவோ கசப்பான சில உண்மைகள். அன்பிற்குப் பின்புலத்திலிருந்த உண்மையான காரணம் எனக்கு வெறுப்பினைத் தந்தது. விளைவாக கவிநயமிக்க மென்மையான உணர்வுகள் விஷயத்திலும் கசப்பினை உணர்ந்தேன்.

உண்மையில் நாம், தொடர்ந்து தம்மை புதுப்பித்துக்கொள்ளும் முட்டாள்தனமும் கவர்ச்சியும் மிக்க மாயைகளின் நிரந்தர கைப்பொம்மைகள். ஆகையால், வயது கூடக்கூட கடும் பிரச்சினைகள், பயனற்ற முயற்சிகள், அர்த்தமற்ற எதிர்பார்ப்புகள் ஆகியவற்றோடு இணக்கமாகவிருக்க சம்மதித்தேன். இந்நிலையில்தான் இன்று மாலை, இரவு உணவிற்குப் பிறகு அனைத்து இன்மையின் மீதும் ஒருபுதிய வெளிச்சத்தினைக் காணமுடிந்தது.

முன்பெல்லாம் சந்தோஷமாக இருந்தேன். என்னைக் கடந்து செல்லும் பெண்கள், வீதிகளின் தோற்றம், எனது குடியிருப்பு இருக்கும் பகுதி என அனைத்தும் என்னைக் கவர்ந்தன. ஆனால், திரும்பத் திரும்பக் அக்காட்சிகளை காண நேரிட்டதால், எனது இதயத்தில் அயற்சியும் எரிச்சலும் நிரம்பி வழிந்தன. அதாவது நாடகத்திற்குச் செல்லும் ஒரு பார்வையாளனக்கு ஒவ்வொரு மாலையும் ஒரேவிதமான நாடகத்தைக் காண நேர்ந்தால் என்ன நேருமோ அத்தகைய அனுபவம்.

கடந்த முப்பது ஆண்டுகளாக நான் படுக்கை யிலிருந்து எழும் நேரம் மாறியதா என்றால், இல்லை. பிறகு கடந்த முப்பது வருடங்களாக நான் செல்லும் உணவுவிடுதியையும் மாற்றிக்கொள்ளாமலிருக்கிறேன். அங்கு உணவு கொண்டுவரும் பரிசாரகர்கள் மாறி யிருக்கிறார்கள். மற்றபடி உண்ணும் நேரத்திலும் உணவிலும் மாற்றங்கள் இல்லை.

பயணத்தை முயற்சித்ததுண்டா? உண்டு. ஆனால், புதிய இடங்களில் தனிமை எனக்குப் பயத்தை அளித்தது. இந்த உலகில், சின்னஞ்சிறிய ஜீவனாக என்னை உணர்ந்த கணத்தில், தனிமை படுத்தப்பட்டதுபோன்ற உணர்விற்கு ஆளாகி, வீட்டிற்குத் திரும்பிவிடுவேன்.

பிறகு வாங்கிய நாளில் எப்படிப் பார்த்தேனோ அதுபோலவே கடந்த முப்பது ஆண்டுகளாக போட்டது போட்டபடி ஒரே இடத்தில் இருக்கிற வீட்டுத் தளவாடங்களும், புதிதாக வாங்கிவந்த மெத்தை இருக்கைளின் தேய்மானங்களும், பொதுவாக ஒவ்வொரு குடியிருப்பும் காலப்போக்கில் ஒருவாசத்தைப் பெற்றுவிடும் என்பதற்கிணங்க குடியிருப்பிலிருந்துவருகிறஒருவிதவாசமும்,ஒவ்வொரு இரவும் இப்படியொரு வாழ்க்கை மீது மாறாததொரு குமட்டலையும் விளங்கிக்கொள்ளவியலாத ஒருவித துன்பத்தையும் எனக்குத் தந்திருக்கின்றன.

ஆக அனைத்துமே ஓயாமல் திரும்பத் திரும்ப நிகழ்கின்றன. பூட்டிய பூட்டை எப்படி திறக்கிறேன் என்பதில் ஆரம்பித்து, என்னுடைய தீப்பெட்டியை எந்த இடத்திலிருந்து ஒவ்வொரு முறையும் எடுக்கிறேன், தீக்குச்சியின் பாஸ்பரஸ் பற்றி எரிகிறபோது எனது அறையில் கண்ணிற்படும் முதற்காட்சிவரை அனைத்தும் தப்பிக்கவியலாத சலிப்பூட்டுகிற நிகழ்வுகள் என்பதால், சன்னலுக்கு வெளியே குதித்து இவற்றுக்கெல்லாம் முடிவுகட்டலாமா என்று கூட நினைப்பதுண்டு.

ஒவ்வொருநாளும் முகச்சவரம் செய்துகொள்ளும் போது என்னுடைய கழுத்தை அறுத்துக்கொள்ளலாம் என்கிற வெறித்தனமான எண்ணம் வரும், பிறகு கண்ணாடியில் எப்போதும்போல தெரிகிற எனது முகத்தையும் சோப்புநுரையோடு அக்கன்னங்களையும் பார்க்கிறபோது அனேக தடவை துக்கம் தாங்காது அழுதிருக்கிறேன்.

முன்பெல்லாம் எந்தெந்த மனிதர்களை மகிழ்ச்சியுடன் சந்திப்பேனோ அவர்களைக்கூட தற்போது சந்திப்பதில்லை. அவர்களை நன்கறிந்தவன். அதாவது அவர்கள் என்ன சொல்லப்போகிறார்கள், அதற்கு என்னுடைய பதில் என்னவாக இருக்கும், எப்போதும் ஒரே மாதிரியாக இருக்கிற அவர்களுடைய சிந்தனையை வார்த்தெடுக்கும் கலன் எது, அவர்கள் முன்வைக்கும் நியாயங்களின் நெளிவு சுளிவுகள் எவை? என்று அனைத்தையும் அப்போது தெரிந்து வைத்திருந்தேன்.

மனிதர் மூளைகள் ஒவ்வொன்றும் ஒரு சர்க்கஸ் கூடாரம். அங்கே தப்பவழியின்றி சுற்றிவரும் விலங்காக இருப்பது ஒரேஒரு குதிரை. முயற்சிகள், மாற்றுப் பாதைகள், சுற்றுவழிகளென்று

அணுகுமுறைகளை நாம் மாற்றிக்கொண்டாலும் வரைமுறைக்கு உட்பட்டே செயல்படமுடியும். பிறகு திரும்பவும் பழைய நிலமைக்குத் திரும்பவேண்டும். முயற்சிகள், மாற்றுப்பாதைகள், சுற்றுவழிகள் என அணுகுமுறைகளில் சில வழிமுறைகளை கையாண்டாலும் ஓரள்விற்கே சாத்தியமாகும். பிறகு எப்போதும்போல பழைய பாதையில் ஓயாமல் ஒரேவிதமான கருத்துக்களை, மனமகிழ்ச்சியை, கேலி பேச்சுக்களை, மரபுகளை, நம்பிக்கைகளை, ஒவ்வாமைகளை சுமந்தபடி உழலவேண்டும்.

கடுமையான பனிமூட்டம். அகன்ற வீதிகளையும் அவை மூடியிருக்க, புகை மூடிய மெழுகுவர்த்திகள்போல தெருவிளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. தோள்களில் இதுவரை அறிந்திராத பாரம், உண்டது செரிமானம் ஆகாமல் இருந்திருக்கலாம்.

உண்பது ஒழுங்காக செரிமானம் ஆக கொடுப்பினை வேண்டும். வாழ்க்கையில் அனைத்துமே அதைச் சார்ந்தே இருக்கின்றன. கலைஞனுக்கு உத்வேகமும் இளம் வயதினருக்கு காதல் ஆசைகளும் சிந்தனையாளருக்குத் தெளிவான எண்ணங்களும் அனைவருக்கும் வாழ்க்கைக்கான சந்தோஷமும் நல்ல செரிமானத்தினால் மனிதருக்கு கிடைக்கும் நன்மைகள். தவிர நன்றாகச் சாப்பிடவும் மனிதர்க்கு அது உதவுகிறது (இதற்கு மிகப்பெரிய அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்). நோய்பட்ட வயிறு சந்தேகிக்கவும் நம்பிக்கையின்மைக்கும் கொடுங்கனவுகளுக்கும் மரணத்தின் மீதான விருப்பத்திற்கும் காரணமாகிறது என்பதை நான் நன்குணர்ந்திருக்கிறேன். இன்று மட்டும் நான் உண்டது ஜீரணமாகியிருக்குமெனில், ஒருவேளை எனது தற்கொலை எண்ணம் தவிர்க்கபட்டிருக்கக் கூடும்.

கடந்த முப்பது வருடங்களாக நாள்தோறும் மெத்தை நாற்காலியில் உட்காருவது வழக்கம். அவ்வாறு உட்கார்ந்திருக்கும் நேரத்தில் பார்வையை என்னைச் சுற்றிலும் ஓடவிடுவதுண்டு. அப்படிச் செய்கிறபோது மிக கடுமையானதொரு வேதனைக்கு ஆளாகி, கிட்டத்தட்ட பைத்திய நிலைக்குப் போவதுண்டு.

என்னிடமிருந்தே நான் தப்பினால் போதுமென்றொரு நிலமையில் அதற்கான யோசனைகளில் இறங்கியதுண்டு. நான் எதையும் செய்யாமல் சும்மா இருந்திருக்கலாம். எதையாவது செய்யலாம் எனப்போக மிகப் பயங்கரமான அச்சுறுத்தலுக்கு ஆளானேன். மேசைஇழுப்பறைகளில் குவிந்துகிடக்கும் காகிதங்களை ஒழுங்குபடுத்த நினைத்தேன்.

எப்போதிருந்து என்பது நினைவில்லை. ஆனால், நீண்ட நாட்களாகவே என்னுடைய மேசையின் இழுப்பறைகளை சுத்தம் செய்ய நினைப்பதுண்டு; காரணம் கடந்த முப்பது ஆண்டுகளாக அந்த மேசையில் கடிதங்களையும் ரசீதுகளையும் கலந்து கட்டி போட்டுவர, அந்த ஒழுங்கின்மை அவ்வப்போது எனக்கு கணிசமான மனக்கலக்கத்தை அளித்து வந்தது. ஆனால், பொதுவாகவே எதையாவது ஒழுங்கு படுத்தவேண்டும் என எண்ணினால் போதும்; மறுகணமே எனது உள்ளம், உடல் இரண்டுமே சோர்வுக்கு ஆளாகும். விளைவாக இக்கடினமான பணியைச் செய்ய ஒருபோதும் துணிவதில்லை.

ஆனால், இம்முறை துணிந்து மேசைக்கு முன்பாக அமர்ந்து இழுப்பறையைத் திறந்தேன். அவற்றில் பெரும்பாலானவற்றை அழித்துவிடும் நோக்கில், அதற்குரியவற்றை தெரிவு செய்தேன். என்முன்பாக ஆண்டுகள் பலவாகசீண்டப்படாமல் பழுப்பு நிறத்தில் குவிந்திருந்த காகிதங்களைக் கண்டு சில கணங்கள் தடுமாறி, பின்னர் ஒன்றை கையில் எடுத்தேன்.

நண்பர்களே! உயிர் வாழ்க்கை மீது நல்ல அபிப்ராயம் உங்களுக்கு இருக்குமெனில் பழைய கடிதங்களின் புதைகுழிகயை ஒருபோதும் தோண்டாதீர்கள்! தப்பித் தவறி அப்படியொரு தவறைச் செய்ய நேர்ந்தால் அவற்றைக் கைநிறைய எடுங்கள்! எடுத்த மறுகணம் கண்களை இறுக மூடுங்கள்; ஏனென்றால், சட்டென்று பழைய நினைவுகளின் சமுத்திரத்தில் உங்களைத் தள்ள வாய்ப்புள்ள ஒரே ஒரு வார்த்தை, மறந்துபோன அல்லது பரிச்சயமான சில வரிகள், உங்கள் கண்களில் பட்டுவிடக்கூடும். அதற்காக அடுத்து நீங்கள் செய்யவேண்டியது, இந்த நச்சுக் காகிதங்களை தீயிலிடுதல். கவனமுடன் செய்யவேண்டும். எரித்த சாம்பலில் துண்டு துணுக்குக்கூட மிஞ்சக்கூடாது. அவ்வளவும் கண்களுக்கு எளிதில் புலனாகாத தூசாக மாற்றப்பட வேண்டும். தவறினால் நீங்கள் தொலைந்தீர்கள். என்னைப் போல!

கடந்த ஒரு மணிநேரத்திற்கு முன்பிருந்து என்னைப் பறிகொடுத்துவிட்டு நிற்கிறேன். என்ன சொல்ல! முதலில் படிக்க நேர்ந்த கடிதங்களில் எனக்குப் பெரிதாக ஆர்வமில்லை. தவிர அவை அண்மையில் எழுதப்பட்டவை. எழுதியவர்களும் உயிரோடிருக்கிறார்கள். அடிக்கடி அவர்களைச் சந்திக்கவும் செய்கிறேன் என்பதால் அவற்றை அலட்சியம் செய்தேன். திடீரென கண்ணிற்பட்ட உறையொன்று மெலிதானதொரு நடுக்கத்தைத் தந்தது. உறைமீது மிகப்பெரிய எழுத்துகளில் இருந்த எனது பெயரைக் கண்டதும் என் விழிகளில் நீர் கோர்த்தது. என்னுடைய ஆருயிர் சினேகிதன், இளமைக்கால தோழன், நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். என்ன ஆச்சரியம், கண்முன்னே அவன் தெளிவான வடிவில் நிற்கிறான். எப்போதும் காணும் இயல்பான புன்னகையை முகத்தில் தேக்கி, கைகள் இரண்டும் என்னை நோக்கி நீட்டியபடி இருக்கும், அவனைக் கண்டதும் எனது முதுகுத்தண்டு சிலிர்த்தது. நான் நேரில் அவனைத் திரும்பவும்

பார்த்தேன். இறந்தவர்கள் திரும்ப வருவார்கள், பொய்யில்லை,உண்மை! பிரபஞ்சத்தைக் காட்டிலும் நம்முடைய நினைவுகள் ஒரு பரிபூரண உலகம். மரித்த மனிதர்களையும் உயிர்ப்பிக்கக் கூடியது அதொன்றுதான்.

எனது கை நடுங்கிக் கொண்டிருக்க, கண்ணீர் திரையிட்டக் கண்களுடன் அவன் அக்கடிதத்தில் தெரிவித்திருந்த அனைத்தையும் வாசித்தேன். விம்மி அழுதுகொண்டிருந்த எனது இதயம் காயமுற்றிருக்க, கைகால்கள் முறிக்கபடும் மனிதரொருவர் வலிபொறுக்க முடியாமல் தனது வேதனையை வெளிபடுத்துவதுபோல நானும் புலம்பினேன்.

நதி மூலத்தைத் தேடி ஒருவர் பயணிப்பதுபோல, எனது கடந்தகால வாழ்க்கையில் பிரவேசித்தேன். பல வருட காலமாக நான் மறந்திருந்த மனிதர்களை அடையாளம் காண முடிந்தது. ஆனால், பெயர்கள் நினைவில் இல்லை. அவர்கள் முகங்கள் மாத்திரம் என்னுள உயிர்பெற்றன. எனது தாயின் கடிதங்களில் அக்காலத்தில் எங்கள் வீட்டில் பணியாற்றிய ஊழியர்களைத் திரும்பக் கண்டேன். எங்கள் வீட்டின் வடிவமும் வந்துபோனது. சிறுவயது பிள்ளைகளுக்கென்று ஒருவகை குணமுண்டு, அர்த்தமற்ற சம்பவங்கள் என்கிறபோதும் அவர்களுக்கு அதில் ஒருவகையான ஒட்டுதலிருக்கும். அன்று அத்தகையவற்றையும் நினைவுகூர்ந்தேன்.

அதுமட்டுமல்ல என்னுடைய தாய் அன்றைய நாகரீகத்திற்கு ஏற்ப உடுத்திய ஆடைகளும் அவைதரும் வகைவகையான தோற்றங்களும் அவற்றுக்குப் பொருத்தமாக அடிக்கடி அவள் கையாளுகிற சிகை அலங்காரங்களும் திரும்பவும் நினைவுகூர முடிந்தது. இறகுபோன்ற மெல்லிய பின்னல் வேலைப்பாடுகொண்ட கவுன் ஒன்றை அவள் சில நேரங்களில் அணிவதுண்டு. அக்காட்சி என் நினைவில் வந்துபோனது. அதிலும் அந்த ஆடையை அணிந்திருந்த ஒரு நாள், ‘மகனே ரொபெர்! நீ நேராக நிற்க பழகிக்கொள்ள வேண்டும். தவறினால் கூன்முதுகோடு வாழ்க்கை முழுதும் இருப்பாய்!’ என எச்சரித்தது, நினைவுக்கு வந்தது.

பிறகு மேசையின் மற்றொரு இழுப்பறையைத் திறந்தேன். எதிரே எனது இளமைக்கால காதல் அனுபவங்களை நினைவூட்டுவதுபோல பாலே நடனத்திற்குரிய ஒரு ஷூ, கிழிந்த ஒரு கைக்குட்டை, ஒரு கணுக்காலுறை, தலைமுடிகள், உலந்த பூக்களென்று வரிசையாக இருந்தன. என்னுடைய வாழ்க்கையில் இரண்டு காதல் கதைகள், அவற்றின் கதாநாயகிகள் தலை முழுவதுமாக நரைத்து இன்றும் உயிர்வாழ்கிறார்கள், அவற்றை எண்ணிப் பார்த்தபோது, ஒருபோதும் முடிவுறாத கசப்பான துன்பத்தில் மூழ்கினேன். தங்கச்சரிகை போன்ற கேசங்கள் ஒட்டி உறவாடும் இளம் நெற்றிகள், கைகளின் தீண்டல்கள், உரையாடும் பார்வை, துடிக்கும் இதயங்கள், உதடுகளுக்கு உத்தரவாதம் தரும் புன்சிரிப்பு, தழுவலுக்கு அழைத்துச்செலும் உதடுகள்.. முதல் முதல்.., முடியாமல் நீளும் அம்முத்தம் கண்களை மூடச் செய்து, கூடியவிரைவில் உடமையாக்கிக்கொள்ள இருக்கிறோம் என்கிற அளவிட முடியாத இன்பத்தில், அனைத்து சிந்தனைகளையும் மூழ்கடித்துவிடும்.

முன்னாள் காதலின் இப்பழைய பிணையப் பொருட்களை கைகொள்ள எடுத்து, அவற்றை வெறித்தனமான தழுவல்களைக் கொண்டு மூடினேன். நினைவுகளால் சிதைக்கபட்டிருந்த என் ஆன்மாவில் அவை ஒவ்வொன்றையும் அனாதையாகப்பட்ட நேரத்தில் எப்படி இருந்தனவோ அப்படித் திரும்பப் பார்த்தேன்; நரகத்தை விவரிக்க அனைத்து கட்டுக்கதைகளிலும் சந்திக்கிற, இட்டுக்கட்டிய வதைகளுக்கும் மேலானதொரு கொடுமையான சித்திரவதையை அன்று நான் அனுபவித்தேன்.

இன்னுமொன்று வாசிக்க இருக்கிறது. அது என்னுடையது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய ஆசிரியர் சொல்வது எழுதுதல் என்ற பெயரில் எனக்கு கொடுத்தது:

*‘அன்பினிய எனது அம்மாவிற்கு,*

*இன்றெனக்கு ஏழு வயது. பகுத்தறியும் வயது. எனவே, இவ்வுலகிற்கு என்னை நீ கொண்டுவந்தவள் என்கிற வகையில் உனக்கு நன்றி கூற இது உகந்த தருணம்.*

*உங்களை மிகவும் நேசிக்கும் மகன்,*

*ரொபெர்*

எல்லாம் முடிந்தது. ஒருவழியாக நதி மூலத்தை அடைந்தது போல, எனது ஆரம்பத்திற்கு வந்தாயிற்று. என்னுடைய வாழ்க்கையில் எஞ்சியிருப்பதை அறிய முற்பட்டதுபோல எனது பார்வையைச் சட்டென்று திருப்பினேன். குரூரமான தோற்றத்துடன் ஒற்றை மரமாக முதுமை, அடுத்து காத்திருப்பது தள்ளாமையும் பலவீனமும். ஆக அனைத்தும் முடிந்தது, இன்று நான் யாருமற்ற அநாதை.

என்னுடைய கைத்துப்பாக்கி மேசை மீது, கைக்கெட்டும் தூரத்தில். தோட்டாக்களை நிரப்புகிறேன்.. ஒரு போதும் உங்கள் பழைய கடிதங்களை திரும்ப வாசிக வேண்டாம்.’

ஆக அனேக மனிதர்கள் தங்களைத் தாங்களே மாய்த்துக் கொள்வது, இதுபோன்ற காரணங்களுக்காக. நாமோ இவ்வாறான முடிவுகளுக்கு மிகப்பெரிய துன்பங்கள் காரணமாக இருக்கவேண்டுமென நினைத்து வீணில் நேரத்தை செலவிடுகிறோம்.

17 april 1883

நாகரத்தினம் கிருஷ்ணா <nakrish2003@yahoo.fr>

# கண்ணீர்த் துளிகளால் மூழ்கிக் கொண்டிருக்கும் இலங்கை!

## தமிழ்நதி

சைக்கிள் ஒன்றின் விலை ஒரு இலட்சத்து இருபத்தேழாயிரம் ரூபாய் என்று சொன்னால் நீங்கள் நம்புவீர்களா? பச்சைப் பொய் என்று சிரித்திருப்பீர்கள். இதை எழுதும் நான்கூட ஜூலை மாதம், 2022ஆம் ஆண்டு இலங்கையில் இல்லாமலிருந்திருந்தால், அதை மிகைப்படுத்தப்பட்ட செய்தி என்றே எண்ணிக் கடந்திருப்பேன். இலங்கையில் எரிபொருட் தட்டுப்பாடு உச்சத்தை அடைந்தபோது, வீட்டுத் தாழ்வாரங்களில் சாத்தி வைக்கப்பட்டிருந்த மிதிவண்டிகளுக்கும் அவற்றைத் திருத்தும் கடைக்காரர்களுக்கும் 'மறுவாழ்வு' பிறந்தது.

இலங்கையில் 'கோவிட்' காரணமாக சுற்றுலாத் துறை வருவாயில் ஏற்பட்ட வீழ்ச்சி, தவறான பொருளியல் நிர்வாகம், தகுந்த கால அவகாசமோ முன்னறிவித்தல்களோ இன்றி இரசாயன உரத்திற்குத் தடைவிதித்து இயற்கை உரத்திற்கு மாறும்படி விவசாயிகளை நிர்ப்பந்தித்தமையால் பயிர்ச் செய்கையில் (குறிப்பாக நெற்செய்கையில்) ஏற்பட்ட பாதிப்பு, அதன் விளைவான விலையேற்றம், ராஜபக்ஷக்கள் பதவியேறியதும் அரசுக்கு வருமானத்தை ஈட்டித் தரக்கூடிய வரிகளைத் தளர்த்தியமை ஆகியனவே பொருளாதார நெருக்கடிக்கான காரணங்களெனச் சொல்லப்பட்டபோதிலும், ராஜபக்ஷ குடும்பத்தின் ஊழல்கள், ஆடம்பரம், சொத்துக் குவிப்பு ஆகியனவும் நாட்டின் வீழ்ச்சியில் வகித்த பங்கைக் குறைத்து மதிப்பிட்டுவிடலாகாது. எல்லாவற்றுக்கும் மேலான அடிப்படைக் காரணமாக அமைந்தது, ஆரம்பத்திலிருந்து இன்றுவரையில் உள்ளார்ந்தும் வெளிப்படையாகவும் இலங்கைத் தீவில் நிலவிவரும் இராணுவவாதமேயாகும். இந்த இராணுவவாதமானது அரசு மற்றும் சிவில் நிர்வாகத்தில் காத்திரமான செல்வாக்குச் செலுத்தியது; செலுத்தி வருகிறது.



2022ஆம் ஆண்டு ஜனவரியில்தான் நெருக்கடியின் தாக்கங்கள் மெதுமெதுவாக வெளித்தெரிய ஆரம்பித்தன. பலியுயிரை மெல்ல நின்று கொல்லும் நோய்போல நிதானமாகவே ஆரம்பித்தது சிக்கல். எல்லாம் வழமைக்குத் திரும்பிவிடுமென்றுதான் நாங்கள் ஆரம்பத்தில் நினைத்திருந்தோம். போரின் நெருக்கடிகளுக்கு முகங்கொடுத்து ஏற்கெனவே பழக்கப்பட்டிருந்ததால், கொஞ்சம் பொறுமையோடிருந்தால் போதுமென்றெண்ணினோம். தவிர, மேலுமொரு விடயம் எங்கள் நம்பிக்கைக்கு வலுச்சேர்த்தது. என்னதானிருந்தாலும், தமது சொந்த இன மக்களை பெரும்பான்மையினத்தைச் சேர்ந்த ஆட்சியாளர்கள் தெருவில் அலையவிடமாட்டார்களென்று நாங்கள் முட்டாள்தனமாக நம்பிக்கொண்டிருந்தோம். அவர்களுக்கு வார்ப்பதில் சிறிதளவேனும் தமிழர்களுக்கு பொசியக்கூடுமென்று எண்ணியிருந்தோம்.

அனைத்து நம்பிக்கைகளும் நாளடைவில் பொய்த்துப்போயின!

முதலில் சமையல் எரிவாயு தீர்ந்தது. அதுவும் தற்காலிகமானதென்று நினைத்தோம். எதற்கும் இருக்கட்டுமென, மின்சாரத்தில் இயங்கும் அடுப்பைத் தேடி கடைகள்தோறும் ஏறியிறங்கினோம். "மின்சாரத்தில் இயங்கும் அடுப்பு இருக்கிறதா?" என்ற, ஏற்கெனவே பலதடவைகள் செவிமடுக்கப்பட்ட கேள்விக்கு கடைக்காரர்கள் தலையுயர்த்தாமலே "இல்லை"யென்று சலிப்போடு பதிலளித்தபோது, நாங்கள் பிந்திவிட்டதை உணர்ந்தோம். எங்களது பகுதியிலிருந்த பலசரக்குக் கடை முதலாளியொருவர் வாடிக்கையாளர்களுடன் 'உடன்படிக்கை' ஒன்றைச் செய்தார். இத்தனை ரூபாய்க்கு பொருட்கள் வாங்கினால், எரிவாயு கலனொன்றை (அதுவும் அதிக காசுக்கு) தரபெருந்தன்மையோடு ஒப்புக்கொண்டார். நாங்கள் அவரது வாடிக்கையாளர்களன்று. ஆயினும், இத்தகைய நெருக்கடி நிலைகளைத் தமக்குச் சாதகமாகப்



பயன்படுத்துவதற்கென்றே காத்திருப்பவர்கள் எங்களுக்குக் கைகொடுத்தார்கள். பதினைந்தாயிரம் ரூபாவிற்கு ஒரு மின்னடுப்பு கிடைத்தது.

அப்படியெல்லாம் ஒரேயடியாக மகிழ்ந்துபோய்விட மின்வெட்டு அனுமதிக்கவில்லை. கறி கொதித்துக் கொண்டிருக்கும்போதே மின்சாரம் அறுந்துவிடும். ஆங்கில எழுத்தாகிய ஏ-யிலிருந்து டபிள்யூ வரை மின் வழங்கு வலயங்கள் வகுக்கப்பட்டிருப்பதையும், அந்த அட்டவணையில் குறிப்பிடப்பட்டிருக்கும் நேரங்களின்படி மின்சாரம் வெட்டப்படும் என்பதையும் நெருக்கடி நிலை யின்போது அறிந்துகொண்டோம். காலை எட்டு மணிக்கு மின்வெட்டெனில் விடிகாலையிலேயே எழுந்து அரிசியைப் போட்டோம். தொட்டியில் தண்ணீரை நிரப்பினோம். அலைபேசிக்கும் மடிக்கணினிக்கும் மின்னேற்றினோம். சிலசமயம், அறிவிக்கப்பட்ட நேரத்திற்கு மின்வெட்டு நிகழாமலிருந்து எங்களை ஏமாற்றிவிடுவதுமுண்டு. இது நடந்தது பெப்ரவரியில். காலையில் இரண்டு மணித்தியாலம், மாலையில் இரண்டு மணித்தியாலம் என இருந்த மின்வெட்டு, நேரமும் பொருட்களது விலைகளைப்போன்று படிப்படியாக உயரத்தொடங்கிற்று. ஒருநாள், 13 மணித்தியாலங்கள் மின்சாரம் இடைநிறுத்தப்பட்டது.

மார்ச்சில் நிலைமை மேலும் மோசமாயிற்று. மக்களது ஊடாட்டத்திற்கு ஆதாரமான பெற்றோலும் டீசலும் கிடைப்பது அரிதாயிற்று. எரிபொருள் நிரப்பு நிலையங்களில் தொடங்கும் வரிசை கிலோ மீற்றர்களைக் கடந்து நீண்டது. வரிசைகளில் இடம்பிடிப்பதற்காக முதல்நாளிரவே போய் நின்று (படுத்து) அடுத்த நாட் காலையில் பெற்றோல், டீசலை நிரப்பிவருவது அன்றாடச் செயற்பாடுகளில் ஒன்றாயிற்று. அதுவும் ஓராளுக்கு இத்தனை லீற்றர் மட்டுமே வழங்கப்படுமென்ற கட்டுப்பாடு. (பிற்பாடு கியு.ஆர். கோட் எனப்படும் ஒழுங்கு முறைமையைக் கொண்டுவந்தார்கள்.)பெப்ரவரி மாதம் 177 ரூபாயாக இருந்த பெற்றோலின் விலை ஜூலை 2022இல் 470 ரூபாயாக உயர்ந்தது. உத்தியோகபூர்வமாக அறிவிக்கப்பட்ட விலை இது. கள்ளச்சந்தையில் ஒரு லீற்றர் பெற்றோல் 3,500 ரூபாய்வரை எகிறியது. 5000 ரூபாய்க்குக் கூட பெற்றோல் கிடைக்கவில்லை என்று கூறியவர்களுண்டு.

வாழ்நாளில் வரிசையில் நின்றறியாதவர்களும் கறுப்புச் சந்தைக்காரர்களது அறிமுகங் கிட்டாதவர்களுமாகிய சில செல்வந்தர்கள் தம் விலையுயர்ந்த கார்களில் வரிசையில் நின்றார்கள். தவறு, கார்களுள் நாட்களைக் கழித்தார்கள் என்பதே பொருத்தமாக இருக்கும். தோய்க்கப்பட்ட காற்சட்டைகளும் துவாலைகளும் கார் 'டிக்கி'களில் காயவிடப்பட்டு காற்றிலாடின. அதன் பொருள் அன்றிரவை அவர்கள் அங்கு கழித்திருக்கிறார்கள் என்பதாகும். இங்கொரு புதிய தொழில் வாய்ப்பு உருவாகிற்று. அதாவது, எரிபொருள் வரிசையில் வாகனங்களோடு கூட நிற்பதற்குக் காசு. புகையிரதங்களில் துண்டு போட்டு இருக்கை பிடித்துக்கொடுப்பவர்களுக்கு கூலி வழங்குவதுபோல இஃதொரு புதிய தொழில்.

ஒரே வார்த்தையில் சொல்வதானால் அஃதொரு வரிசைகளின் காலம்! பெற்றோலுக்கு, மண்ணெண்ணெய்க்கு, பலசரக்குப் பொருட்களுக்கு

எங்கெங்குகாணினும்வரிசைகள்.கைக்குழந்தைகளைத் தோளில் சாய்த்துக்கொண்டு மண்ணெண்ணெய் 'கான்'களுடன் ஏழைத் தாய்மார்கள் வரிசைகளில் நின்றார்கள். காலையில் எழுந்து கணவனை வேலைக்கும் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கும் அனுப்பிவைத்தபின் வீட்டுவேலைகளைத் தொடங்குகிற,வேலைக்குப்போகிறபெண்ணென்றால் தானும் பேருந்து நிலையத்தை நோக்கி பரபரத்தோடி பின்னேரம் வீடு திரும்புகிற இயல்பு வாழ்வை இந்தப் பொருளாதார நெருக்கடி புரட்டிப்போட்டது.

கேட்ட பொருட்கள் கடைகளில் கிடைக்கவில்லை. ஒன்றைக் கேட்டால் மற்றொன்று இருப்பதாக கடைக்காரர்கள் சொல்லத் தொடங்கினார்கள். பேரங்காடிகளில் பொருட்களை அடுக்கி வைக்கும் தட்டுகளிற் சில வெறுமையாகத் தொடங்கின. ஏனென்று வினவினால், "அரசின் கஜானா காலியாகிவிட்டதாம். டொலர் கையிருப்பில் இல்லையாம். அதனால் பொருட்களை இறக்குமதி செய்ய முடியவில்லையாம்" என்றார்கள். 'ஓகோ! இத்தனை நாட்கள் பொருட்களை ரூபாய் கொடுத்து வாங்கவில்லை, டொலர்களில் வாங்கிக் கொண்டிருந்தோம்' என்ற புரிதல் சாமான்யர்களுக்குக் கிட்டியது.

அரசாங்கமானது தன்னை நம்பி வாக்களித்த மக்களுக்கு இப்படி இன்னும் பல 'புரிதல்'களை வழங்க இருப்பது அப்போது கூட புலனாகவில்லை. பொருட்களது இறக்குமதி டொலர் கையிருப்பின்மையால் தடைப்பட்டது ஒரு காரணமெனில், தமது தேவைக்கு மேலதிகமாக பொருட்களை அள்ளிச்சென்று வீடுகளில் பதுக்கிவைத்த பணக்கார வாடிக்கையாளர்கள் வேறு வலிந்த தட்டுப்பாட்டை உருவாக்கினர். பதினைந்து, இருபது சவர்க்காரங்கள், பால் மா பைகள், ஷாம்பூ போத்தல்கள், கோதுமை மா, மெழுகுவர்த்தி, அரிசி என இதர மனிதர்களைக் குறித்த கூச்சமேயின்றி வாங்கிக்கொண்டு போய் சேர்த்துவைத்தார்கள். அப்படிச் சேர்த்துவைத்த அரிசிப் பைகள் நாட்பட்டதில் புழுக்கள் வாழும் கூடாகி குப்பையில் சேர்ந்தன.

பள்ளிக்கூடங்களிலே பசியினால் மாணவர்கள் மயங்கிவிழும் செய்திகள் வரத்தொடங்கின. நெடுநேரம் வரிசையில் நின்ற களைப்பினால் வீழ்ந்து இறந்துபோன முதியவர்கள்... ஏற்கெனவே நோய்வாய்ப்பட்டிருந்து, இந்த நெடிய காத்திருப்பின் காரணமாக அந்நோயின் பாதிப்பு அதிகரித்து, அதனால் உயிரிழந்தவர்கள் என உயிரிழந்தவர்களது எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கிற்று. வரிசையில் நின்றபோது ஏற்பட்ட தகராறில் இளைஞரொருவர் கத்தியால் குத்திக் கொல்லப்பட்ட சம்பவம்கூட நடந்தது. இந்த நெருக்கடியினால் மட்டும் 22 உயிர்கள் அநியாயமாகப் பலியாகினவென்று செய்திகளிலிருந்து அறியக் கிடைத்தது.

மண்ணெண்ணெய், எரிவாயு தட்டுப்பாட்டால் கிராமங்களில் வாழ்ந்தவர்களைவிட அதிகமும் பாதிக்கப்பட்டவர்கள் நகரவாசிகளே. அவர்களது தொடர்மாடிக் குடியிருப்புகளில் விறகுவைத்து நெருப்புமூட்டிச் சமைப்பதென்பது சாத்தியமில்லை. சுவை எவ்வளவுதான் குறைந்தாலும் கடைகளில் சாப்பாட்டின் விலையோ உயரத்தில்தானிருந்தது. எரிவாயுத் தட்டுப்பாட்டால் உணவகங்களுட் பெரும்பாலானவை பூட்டப்பட்டுவிட்ட நிலையில் வீட்டுச் சமையலன்றி வேறு வழியும் இருக்கவில்லை. அடுத்தவேளை உணவுக்கு வழியென்னவென்று அறியாது திகைத்துப்போனார்கள் மக்கள்.

வழக்கம்போலவே காசுள்ளவர்கள் எங்ஙனமோ பிழைத்துக்கொண்டார்கள். குறிப்பாக, வெளிநாடுவாழ் உறவினர்களிடமிருந்து பணவருவாயைப் பெற்றவர்களுக்கு, இலங்கையின் பணவீக்கம் காரணமாக வழக்கத்தைவிட அதிகமான நாணய மாற்று விகிதம் கிடைத்தது. அமெரிக்க டொலர் ஒன்று, நானூறு ரூபாய்க்கு நிகரெனும்படி இலங்கை ரூபாயின் பெறுமதி வீழ்ச்சியடைந்தது. கனடிய டொலரின் பெறுமதியோ வரலாறு காணாத அளவு- அதாவது, முன்னூறு இலங்கை ரூபாயைத் தாண்டியது. மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்கு இதுவொரு சாதகம்போலத் தோன்றினும், எவ்வளவு பணம் கிடைத்தாலும் சமாளிக்க முடியாதளவில் விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போயின. ஏழைகள் மென்மேலும் கொடிய வறுமையுள் தள்ளப்பட்டார்கள். இரண்டு வேளை சாப்பிடுவதே பெரும்பாடென்றாயிற்று.

வெளிநாடுகள் மற்றும் உலகளாவிய நிதி நிறுவனங்களிலிருந்து வாங்கப்பட்ட கடன்கள், மக்கள் நலன்களுக்காகவோ அபிவிருத்திக்காகவோ செலவழிக்கப்படாமல் அரசியல்வாதிகளின் சட்டைப் பைகளுள் சென்று மறைந்தன. ஊழல் பேய் தலையைத் தாறுமாறாக விரித்துப் போட்டுக்கொண்டு ஆடியது. எரிவாயு மற்றும் எரிபொருளை ஏற்றிவந்த கப்பல்கள் கடலில் தரித்துக் காத்திருந்தன. அவற்றுக்குச் செலுத்தவேண்டிய கட்டணத்தைச் செலுத்த அரசின் கஜானாவில் காசில்லை. கப்பல்கள் கடலில் காத்திருந்த ஒவ்வொரு நாளுக்கும் பல்லாயிரக்கணக்கான டொலர்களை தண்டப்பணமாக இலங்கை அரசு செலுத்த வேண்டியிருந்தது. ஆக, அரசு இழைத்த தவறுக்கான தண்டனையை மக்கள் அனுபவிக்கத் தொடங்கினர். ஆரம்பத்தில் இவற்றின் தாக்கத்தை பெரும்பான்மையின மக்கள் உணர்ந்துகொள்ளவே யில்லை. அவர்களையறியாது அவர்களுமேகூட இராணுவவாதத்தின் கட்டுப்பாட்டின் கீழிருந்தார்கள்.

நிதி, நீதி, சட்டம், ஊடகம், சிவில் என அனைத்து சேவைகளிலும் இராணுவ ஆதிக்கம் நிலவியது. நேரடியான பிரசன்னம் அவசியமற்ற இடங்களிலுங்கூட இராணுவம் மறைமுகமான தாக்கத்தைச் செலுத்தியது. அது பெரும்பான்மை

யினத்தைத்தொந்தரவு செய்யாதவரையில் அவர்களும் அதில் விரும்பியே கட்டுண்டு கிடந்தார்கள். ஆனால், தமது வாழ்வாதாரத்திற்கே ஆபத்து ஏற்பட்ட நிலையில், நாட்டின் வளங்களும், 'வெற்றிபெற்ற இனம்' என்ற பெருமிதத்தினூடாக தம் உணர்வுகளும் சுரண்டப்படுவதை கண்டுகொண்டார்கள். முப்பதாண்டு காலமாக நீடித்த உள்நாட்டுப் போரை முடிவிற்குக் கொண்டுவந்தவர்கள், வெற்றித் திருமகன்கள் என்ற கவசத்தால் நீண்டநாட்களுக்கு ஆட்சியாளர்களைப் பாதுகாக்க முடியவில்லை. தனியொரு குடும்பத்தின் சுரண்டல்களை மக்கள் காலந்தாழ்த்தியே புரிந்துகொண்டார்கள். கொதித்தெழுந்து வீதியில் இறங்கினார்கள். மார்ச் 31ஆம் திகதியளவில் மக்கள் வீதிகளில் இறங்கி ஆட்சியாளர்களுக்கெதிராகப் போராடத் தொடங்கினார்கள்.

"இத்தனை காலமும் நாங்கள் எவ்வளவு வதைபட்டோம். அதைக் கண்ணெடுத்தும் பார்க்காத சிங்களவர்கள் இன்று தமக்கு உணவும் எரிபொருளும் இல்லையென்றவுடன் அரசிற்கெதிராக வீதியில் இறங்கியிருக்கிறார்கள்" என தமிழர்கள் கதைக்கத் தொடங்கினார்கள். தமக்குள்தான்.

பெரும் எண்ணிக்கையிலான பல்கலைக்கழக மாணவர்கள் அரசிற்கெதிரான போராட்டங்களில் இணைந்துகொண்டனர். போராட்டக்காரர்கள், இலங்கையின் தலைநகர் கொழும்பின் மையப்பகுதிகளிலொன்றாகிய காலிமுகத்திடலில் கூடாரங்கள் அமைத்து அங்கேயே தங்கி யிருக்கத் தொடங்கினர். அவ்விடத்தை நோக்கி மக்கள் வெள்ளம் பெருகத்தொடங்கிற்று. கலைஞர்கள், மதகுருமார்கள் என அவ்விடத்தை நோக்கி ஒவ்வொருநாட்களும் சனங்கள் செல்லத்தொடங்கினர். 1956ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஐந்தாம் திகதி, இலங்கையின் பாராளுமன்றத்தில், அரசகரும மொழியாக 'சிங்களம் மட்டுமே' இருக்குமென்ற பிரேரணை முன்வைக்கப்பட்டபோது, அதை எதிர்த்து வெளிநடப்புச் செய்த எஸ்.ஜே.வி. செல்வநாயகம் (பெரும்பான்மையினத்தைச் சேர்ந்த காடையர்கள் அவர் மீதும் இதர சத்தியாக்கிரகிகள் மீதும் குண்டாந்தடிகளால் தாக்குதலைத் தொடுத்ததோடல்லாமல், செல்வநாயகம் அவர்களைத் தூக்கிக் கடலினுள் எறிந்தனர்.) அவர்களது தலைமையில் எந்தக் காலிமுகத்திடலில் சத்தியாக்கிரகப்போராட்டம் நடத்தப்பட்டதோ அதே காலிமுகத்திடலில், அறுபத்தாறு ஆண்டுகளுக்குப் பின் (2022) சிங்களப் பெரும்பான்மை ஆட்சியாளர்களை எதிர்த்து கடலலைகளுக்கு நிகரான மனிதர்கள் திரண்டனர்.

"இனியும் உங்களது ஏமாற்று வேலைகள் மக்களிடம் எடுபடாது. பதவிகளைத் துறந்து நாட்டைவிட்டு வெளியேறுங்கள்."

"எங்களிடமிருந்து திருடிய பணத்தை எங்களுக்குத் திருப்பிக்கொடு."

"கோத்தாபாய வீட்டுக்குப் போ."

"எங்களுக்கும் பிள்ளைகள் இருக்கிறார்கள்."

"நீங்கள் எங்களுடைய நாட்டை விற்றுவிட்டீர்கள்."

என்றெழுதப்பட்ட பதாகைகளை அவர்கள் கையிலேந்தியிருந்தார்கள்.

இந்தப் போராட்டத்தில் குறைந்த எண்ணிக்கை யிலான தமிழர்களே பங்கேற்றனர். அதற்கு, சட்டம் மற்றும் பாதுகாப்புப் படைகளின் இனரீதியான பாரபட்சங்கள் குறித்த முன்னனுபவங்களும் எச்சரிக்கையுணர்வும் காரணமாக இருந்திருக்கக்கூடும். ஒரு புகைப்படத்தையோ காணொலியையோ வைத்திருக்கிறோம் என்பதற்காகவே கைதுசெய்யப்படுவோமென்ற 'பாதுகாப்பான' சூழலில் எதை, எவரை நம்பி போராட்டத்தில் குதிப்பதென்று பின்னடித்திருக்கக்கூடும். எனினும், பல நூற்றுக்கணக்கான தமிழ் இளைஞர்கள், ஊழல்வாதிகளிடமிருந்து நாட்டை மீட்போமெனும் பொது நோக்கத்துடன் தம்மை இணைத்தனர். அவ்விடத்தில் இனவாதம் தற்காலிகமாகவேனும் வலுவிழந்திருந்தது. நல்லிணக்கம் நல்லிணக்கம் என்று கூவித்திரியும் அரசியல்வாதிகளது வெற்றுக்கூச்சல்களை விட, அங்கு இனபேதம் மறந்து கூடியிருந்த இளைஞர்கள் நம்பிக்கை தருபவர்களாகத் தோன்றினார்கள்.

இலங்கை பொருளாதார நெருக்கடியானது நாடளாவியரீதியில் அனைவரையும் பாதித்தது. எனினும், தமிழர்களுக்கு இத்தகைய சூழல் புதிதன்று. விடுதலைப்புலிகள் வடபகுதியைத் தமது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருந்த காலத்தில், வடபகுதி வாழ் மக்கள்மீது காலத்திற்குக் காலம் ஆட்சிக்கு வந்த இனவாத அரசுகள் பொருளாதாரக் கட்டுப்பாட்டை விதித்தபோது, தகுந்த பிரதியீடுகளை தமிழர்களால் செய்யமுடிந்திருந்தது. உதாரணமாக சவர்க்காரத்திற்குப் பதிலாக பனங்களியை உபயோகித்தனர். மின்கலங்களை (பற்றரி) அனுமதித்தால், விடுதலைப்புலிகள் அவற்றை வைத்து வெடிகுண்டு தயாரித்துவிடுவார்களென்ற என்ற அச்சத்தில் அரசு மின்கலங்களுக்குத் தடை விதித்தபோது, சைக்கிளின் டைனமோவைச் சுழற்றுவதனூடாகக் கிடைக்கும் மின்சாரத்தில் வானொலிச் செய்திகளைச் செவிமடுத்து நிலைமைகளைத் தெரிந்துகொள்ளமுடிந்தது. தென்பகுதி மக்களோவெனில் ஒப்பீட்டளவில் அரசின் செல்லப்பிள்ளைகளாகவாழ்ந்து பழக்கப்பட்டவர்கள்.

எனினும், குறித்த இந்தப் போராட்ட

காலகட்டத்தில், அரசின் ஊழல்களுக்கும் வெகுமக்கள் விரோத செயல்களுக்கும் பெரும்பான்மையின மக்கள் பொறுப்பாகமாட்டார்கள் என்றவகையில் அவர்கள் மீதில் தமிழர்களுக்கு அன்போ வெறுப்போ இருக்கவில்லை. அதிகார மையங்கள் தகர்க்கப்பட்டபோது மகிழ்ச்சியுற்ற மனம், எளிய மக்கள் தாக்கப்பட்டபோதும் கைது செய்யப்பட்டபோதும் கலக்கமுற்றது. பொதுவில், அரசிற்கெதிரான போராட்டங்கள் தமிழர்களுக்கு உள்ளார்ந்த குதூகலத்தைக் கொடுத்தனவென்றே சொல்லவேண்டும். இந்தக் குதூகலமானது, இனப்படுகொலையை நினைவுகூர்ந்த மே மாதத்தில் உச்சநிலையை எட்டியதெனலாம். சரி, தவறு என்பதற்கப்பால் அதற்கான வரலாற்று நியாயங்கள் இருந்தன. வீழ்த்தப்பட்டவர்களது வெஞ்சினம் அது.

மற்றொருபுறம், போர் மற்றும் பொருளாதார நெருக்கடி நிலைகளின்போது இயல்பாகவே தலையெடுக்கும் கறுப்புச் சந்தைக்காரர்களுக்குக் கொண்டாட்டமானகொண்டாட்டம்! பொருளாதார நெருக்கடி தொடங்கும்போது ஆயிரம் ரூபாயாக இருந்தசீமெந்தின் விலை 3200 ரூபாயாகிற்று. அதுநாள் வரை சீண்டப்படாமல் கிடந்த சைக்கிள்களுக்கு புது மவுசு பிறந்தது. ஜூலை மாதமளவில் சைக்கிளொன்றின் விலை 1,27,000 என்று மலையில் ஏறியது. ஒரு கிலோ பருப்பின் விலை நானறிய 620 ரூபாய்க்கு விற்றது. ஈழத்தில் பெரும்பாலானோரின் தேநீருக்குச் சுவையூட்டிய 'அங்கர்' பால்மா கடைகளது தட்டுக்களிலிருந்து மாயமாயிற்று. பிறகு அது தானாக வெளிவந்து 1200 ரூபாவாக உயர்ந்து, காணாமற்போய் மீண்டும் திரும்ப வந்தபோது அதன்விலை 2150 ரூபாவாக எகிறியிருந்தது. நகர்வாழ் பொதுமக்கள் தமது உணவுப் பொருட்களுக்கு பெரிதும் தங்கியிருக்கிற 'ஃபூட் சிற்றி', 'ஆர்பிகோ' இன்னபிற பேரங்காடிகள், வாடிக்கையாளர் ஒருவருக்கு ஒரு அங்கர் பால்மா பக்கெற் என்ற விகிதத்தில் கொள்வனவில் கட்டுப்பாட்டைக் கொணர்ந்தன.

மீன், மரக்கறி, பழங்களின் விலையோ சொல்லுந்தரமன்று. மண்ணெண்ணெய் தட்டுப்பாட்டால் மீனவர்களால் கடற்றொழிலுக்குச் செல்லமுடியவில்லை. ஒரு கிலோ விளை மீனின் விலை 2000 ரூபாயை எட்டியது. ஒரு கிலோ நண்டின் விலை 2500 ரூபாய். 'மீன் ரின்' என விளிக்கப்படுகிற தகரத்தில் அடைக்கப்பட்ட மீனுக்கு மவுசும் விலையும் கூடிற்று. ஒரு கட்டத்தில் மீன் ரின்னும் கருவாடுமே இல்லாதொழிந்தன. அல்லது, கள்ளச்சந்தைக்காரர்களது சேமிப்புக் கிடங்குகளில் பதுங்கின. 600 ரூபாயிலிருந்த கோழியிறைச்சியின் விலை 1,600 ரூபாவாக உயர்ந்தது. வடபகுதியைச் சேர்ந்த மரக்கறி வியாபாரிகளில் கணிசமான பேர் தம்புள்ள போன்ற தென்பகுதி நகரங்களிலிருந்து கொணரப்படும் மரக்கறிகளில் தங்கியிருந்தார்கள். எரிபொருட் தட்டுப்பாடு காரணமாக அவை வந்து சேரவில்லை. இந்நிலையும் விலையுயர்வுக்கு வழிவகுத்தது.

தக்காளிப் பழமும் பச்சை மிளகாயும் வரலாறு காணாத அளவிற்கு விலையுயர்ந்தன. ஒரு கிலோ தக்காளிப் பழம் 1000 ரூபாயைத் தாண்டியது. பச்சை மிளகாயின் விலையோ 1200 ரூபாய். பச்சை மிளகாயையும் தக்காளியையும் ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வாங்கமுடியாது துக்கத்தோடு அங்கிருந்து அகன்ற பெண்களை நான் கண்டேன். பெரும்பாலான மக்களின் காலை உணவான பாணின் விலையானது 300 ரூபாயைக் கடந்து, எங்கு சென்று தரிக்குமோ எனத் திகைக்குமளவிற்கு ஒவ்வொரு நாட்களும் ஏறிக்கொண்டே போனது. கோதுமை மாவின் விலையும் அவ்வண்ணமே. மருந்துகளின் விலை 29 சதவீதத்தால் உயர்த்தப்பட்டது.

ஜூலை மாதத்தில் எரிபொருள் நிலையங்களின் முன் வரிசைகள் மேலும் நீண்டுகொண்டே சென்றன. அரசிற்கெதிரான போராட்டங்கள் மும்முரமடைந்தன. வீதிகள் வெறிச்சோடின. தனியார் வாகன சேவைகள் இடைநிறுத்தப்பட்டன. பொதுப்போக்குவரத்து வாகனங்களில் கொள்ளளவை மீறி மக்கள் நெரிந்துகொண்டு பயணம் செய்தனர். புகையிரதங்களின் கூரைகள் மீது நெருக்கியடித்து அமர்ந்து பயணம் செய்யும் காட்சிகள் கண்ணிற்பட்டு அச்சமூட்டின. வாகனங்களின் இடத்தை சைக்கிள்கள் பிடித்துக்கொண்டன. எப்போதும் போக்குவரத்து நெரிசலில் திணறிக்கொண்டிருக்கும் வீதிகளில் சைக்கிள்கள் சாவதானமாகச் சென்று கொண்டிருந்ததானது காட்சிப்பிழை போலத் தோன்றிற்று.

எரிவாயு தட்டுப்பாட்டினால் உணவகங்களிற் பல ஏற்கெனவே மூடப்பட்டுவிட்டிருந்தன. பாடசாலைகளுக்குச் செல்ல வாகனங்கள் அற்ற காரணத்தால் மாணவர்களது எண்ணிக்கை குறைந்தது. சில பாடசாலைகளது கதவுகள் தற்காலிகமாக பூட்டப்பட்டன. வினாத்தாள்கள் தயாரிப்பதற்கான காகிதத் தட்டுப்பாட்டினால் பரீட்சைகள் இடைநிறுத்தப்பட்டன. மின்சாரக் கட்டணங்களைப் பதிந்து தர காகிதங்கள் இல்லாத காரணத்தால், கடைகளில் வழங்கப்படும் பற்றுச்சீட்டு போலொன்றைப் பெற்றுக்கொள்ளநேர்ந்தது. வங்கி அட்டைகள் காலாவதியானால் அவற்றைப் புதுப்பிப்பதற்கு அட்டைகள் இல்லையென வங்கிகள் கைவிரித்தன. பரபரவென்றிருந்த நகரங்கள் ஆள் நடமாட்டமற்ற சூனியப் பிரதேசங்கள் போலாயின.

கடவுச்சீட்டு விநியோக அலுவலகத்தின் முன் நீண்ட வரிசைகள். எப்படியாவது இந்த நாட்டிலிருந்து தப்பியோடிவிட்டால் போதுமென்ற மனநிலை. 2022ஆம் ஆண்டில் மட்டும் ஏறத்தாழ 1500 மருத்துவர்கள் நாட்டைவிட்டு வெளியேறிச் சென்றுவிட்டதாக கொழும்பு மாவட்டத்தின்



பாராளுமன்ற உறுப்பினராகிய ஹர்ஷடி சில்வா தெரிவித்தார். ஜூன் மாதத்தில் மட்டும் 449 மருத்துவர்கள் வெளியேறியதாக புள்ளிவிபரங்கள் கூறுகின்றன. ஏறத்தாழ ஒரு போர்ச்சூழல். ஆட்சியாளர்களின் பொறுப்புணர்வற்ற செயற்பாடுகளால் சாமான்ய மக்கள்மீது தொடுக்கப்பட்ட பொருளாதாரப் போர்.

இதற்கிடையில், மூன்று மணித்தியால மின்வெட்டு நேரம் பத்து, பதினைந்து மணித்தியாலங்களாக அதிகரிக்கப்படலாம் என்ற செய்தி பரவத் தொடங்கிற்று. வெயிலின் காங்கை தோலைப் பொசுக்கிக்கொண்டிருந்த ஜூலை மாதம். ‘அன்னை மண் போல் சுகமில்லை’ என அதுவரை கூறிவந்த வார்த்தைகளின் சுருதி அவரோகணத்தில் கீழிறங்கத் தொடங்கிற்று. அச்சமயத்தில் எனது பொருட்கள் வவுனியாவிலும் நான் கொழும்பிலும் இருந்தோம். வழக்கமாக வவுனியாவுக்குச் செல்ல பதினெட்டாயிரம் ரூபாய் கேட்கும் ‘ஹையேஸ்’ வாகனச் சொந்தக்காரர் ஐம்பதாயிரம் ரூபாய் கேட்டார். அவர் எங்களது குடும்ப நண்பருங்கூட. விமான நிலையத்திற்குச் செல்வதற்கே (ஏறத்தாழ 35 கிலோ மீற்றர்கள்) இருபத்தையாயிரம் ரூபாய்கள் என்றிருந்த நிலையில் அந்தக் கட்டணத்தைக் குறைத்துக் கேட்கவோ குறைகூறவோ நாவெழவில்லை. சென்னை செல்வதற்கான விமானப் பயண சீட்டுக் கட்டணம் ஒரு இலட்சம் ரூபாயாக இருந்தபோது, கொழும்பு விமான நிலையத்திலிருந்து யாழ்ப்பாணம் செல்வதற்கான கட்டணம் ஒன்றரை இலட்சம் ரூபாயாக இருந்தது முரண்ணகையன்றி வேறென்ன?

எனது வீடிருக்கும் வவுனியாவுக்கு (265 கிலோ மீற்றர்கள்) போனால் திரும்பிவர முடியுமா என்ற ஐயம் எனக்கு. எந்நேரம் என்ன நடக்குமென்பதை எவராலும் எதிர்வுகூறவியலாதபடி இருந்தது நாட்டு நிலைமை. செல்லும் வழியெங்கும் ராஜபக்ஷக்களை பதவி விலகுமாறு கோரியும், எரிபொருள், எரிவாயு வேண்டியும் வீதிமறிப்புப் போராட்டங்கள். எனது பொருட்களை மட்டும் எடுத்துவரும்படி கேட்டுக்கொண்டேன்.

மார்ச் 31இல் ஆரம்பித்த போராட்டம் ஜூலை 9இல் போராட்டக்காரர்கள் ஜனாதிபதி மாளிகையை ஆக்கிரமித்ததுடன் உச்சக்கட்டத்தை அடைந்தது. ஜனாதிபதி கோத்தபாய ராஜபக்ஷவும் பிரதம மந்திரி ரணில் விக்கிரமசிங்கவும் பதவி விலகினாலே ஜனாதிபதி மாளிகையிலிருந்து தாங்கள் வெளியேறுவோம் என்று ஆர்ப்பாட்டக்காரர்கள் அறிவித்தார்கள். சனங்களோ ஜனாதிபதி மாளிகையின் நீச்சல் குளத்திலிறங்கி நீச்சலடித்தார்கள். தண்ணீரை வாயிலுறிஞ்சி வானத்தை நோக்கி உமிழ்ந்தார்கள். நேர்த்தியாக வெட்டப்பட்ட புற்றரைகளில் படுத்துக் களைப்பாறினார்கள். தற்படங்கள் எடுத்துக்கொண்டார்கள். உடற்பயிற்சி உபகரணங்களை உபயோகித்து தமது போராட்ட வலுவைத் தேற்றிக்கொண்டார்கள். அரசிருக்கையில் அமர்ந்து பார்த்தார்கள். ‘மேன்மைபொருந்தியவர்’களது கட்டிலில் படுத்து உருண்டார்கள். மாளிகையெங்ஙணும் காகிதங்கள் பறந்தன. இங்கும் வரிசை. மக்கள் வரிசையில் நின்று மாளிகையைப் பார்வையிட்டார்கள். அதுவோர் அருங்காட்சியகம்போல் மாறிற்று. பார்வையிட வந்தவர்களில் ஒரு சிறுவன் வியப்பு அகன்றிரா விழிகளுடனும் கசந்த சிரிப்புடனும் கூறினான்.

“நாங்கள் சாப்பிட வழியில்லாமல் இருக்கும்போது, இங்கே இவர்கள் குளியலறையில் கூட ஏ.சி. போட்டிருகிறார்கள்.”

ஜூலை மாதம் 14ஆம் திகதியன்று, சிங்கப்பூரிலிருந்தபடி கோத்தபாய ராஜபக்ஷ தனது பதவி விலகல் கடிதத்தை மின்னஞ்சல் வழியாக சபாநாயகருக்கு அனுப்பிவைத்தார். அந்தச் செய்தியை உலகெங்ஙணுமிருந்த செய்திச் சானல்கள் ஒளிபரப்பின. போராட்டக்காரர்களுக்கு அஃதோர் கொண்டாட்டத்திற்குரிய செய்தி! 2009 மே மாதம் விடுதலைப்புலிகள் வீழ்த்தப்பட்டபோது, எந்த நகரத்தின் வீதிகள் ஒளிமிகக் கொண்டு துலங்கினவோ, எந்த மக்கள் தமிழர்களது வீழ்ச்சியைத் தமது வெற்றியெனக் கருதி பாற்சோறு பொங்கிப் பகிர்ந்துண்டு பரவசமடைந்தார்களோ அதே நகரத்தில் அதே மக்கள் தமது ‘வெற்றித் திருமகன்’ பதவி விலகலை பேருவகை பொங்கக் கொண்டாடினர்.

இலங்கையின் ஜனாதிபதி (முன்னாளாகிவிட்ட) கோத்தபாய ராஜபக்ஷ பதவி விலகிய செய்தியை, ரொறன்ரோ நகரத்திலிருந்தபடி, ‘வியன்’ தொலைக்காட்சியில் பார்த்தபோது எனக்கு உண்டான மகிழ்ச்சிப்பெருக்கானது போராட்டக்காரர்களது மகிழ்ச்சிக்குசற்றும் குறைந்ததன்று என்றுரைப்பதானது அவ்வுணர்வைக் குறைத்துச் சொல்வதாகும்.

வார்த்தைகளால் வடித்துவிடமுடியாத உணர்வு அது. அதன் பின்னால் காலத்தால் ஆற்றப்பட முடியாத காயங்களும் காரணங்களும் இருந்தன. மரண பரியந்தம் வரை இருக்கும். ●

**தமிழ்நதி** <tamilnathy@gmail.com>

# பிரமீளா பிரதீபனின்
# விரும்பித்தொலையுமொரு காடு

## பொ. கருணாகரமூர்த்தி

இலக்கியத்தைப் பொறுத்தவரை அவற்றைப் படைப்பவர்களின் பௌதீக அடையாளங்களை வைத்து ஆண் எழுத்தாளர், பெண் எழுத்தாளர் என்று வகை பிரிப்பதில் எனக்கும் உடன்பாடில்லை. ஆனால், தமிழ் இக்கியப் படைப்புகளைப் பொறுத்தவரையில் ஒரு படைப்பை வைத்து அதை எழுதியவர் ஆணா பெண்ணா என வாசகன் ஊகித்துக் கண்டுபிடிக்கும்படியாகவே இன்னமும் அவை இருக்கின்றன. காரணம், பெண்கள் சித்தரிக்க எடுத்துக்கொள்ளும் கருக்கள், அவர்களது மொழி, சித்தரிக்கும் விதம் ஆகியவற்றில் ஒரு பொதுத்தன்மை உண்டு. இதை மறுப்பவர்களுடன் கம்பு சுற்றும் எண்ணம் எனக்கில்லை. பிரமிளா இந்த வகைமை யிலிருந்து விலகியிருப்பது ஒரு இனிய ஆச்சரியம்!

பிரமிளா நிறையவே உள்மன யாத்திரை செய்பவராக இருக்கிறார். அவர் சித்தரிக்கும் உலகங்கள் நடப்பிலிருந்து வித்தியாசமானவை. இத்தொகுப்பிலுள்ள கதைகளிலும் செவ்வீதமும் அகவுலகச் சித்தரிப்புகளாக உள்ளன. இன்னும் மயா யதார்த்தம், மிகு யதார்த்த வகைகளிலும் அவர் தன் படைப்புகளைப் பரிசோதித்துப் பார்த்திருக்கிறார்.

என் பதின்ம வயதுகளில் ஒரு நண்பர் மூலம் தியானம் பற்றி அறியவிழைந்தேன். எனக்கு அப்போது பத்மாசனத்தில் அமர்ந்திருப்பதே வல்லையாக இருந்தது. பின் மூச்சுப் பயிற்சி. ஆழமான உள்மூச்சு, அதை நெஞ்சுக்குள் உள்ளடக்கி நிதானமான வெளியேற்றுதல் என்று பலவிதமான பயிற்சிகள் தந்தார். “உனக்கு ஓரளவுக்கு தியானம் கைகூடிச் சிந்தையை ஒடுக்கிக் குவிக்க முடிந்தால் LED மாதிரி நெற்றிப் பொட்டில் சின்னதாக ஒரு ஒளிப்பொட்டுத் தெரியும். அந்த ஒளிப்பொட்டை உன்னால் நினைத்த விடத்துக்கெல்லாம் நகர்த்திச் செல்லமுடியும்; அதை அப்படியே முள்ளந்தண்டினூடாக இடுப்பின் கீழாக இறக்கி ’குண்டலினி’ எழுப்பலாம்” என்றெல்லாம் சொன்னார். மாதக்கணக்கில் முயன்றும் எனக்கொரு ஒளிப்பொட்டும் தோன்றவே இல்லை. தியானம் எனக்கான விஷயமல்ல என்று புரிந்ததும் அதை அத்துடன் விட்டுவிட்டேன்.



இத்தொகுதியிலுள்ள, ’அது புத்தனின் சிசுவல்ல’ கதையிலிருந்து பிரமிளா நிறைய வாசித்திருக்கிறார் என்பதுவும், தியானம், யோகம், குண்டலினி என்று பயிற்சிகள் செய்யவோ குறைந்தது அவைபற்றி அறிந்துகொள்ள நிறையவே வினைக்கெட்டிருப்பாரென்றும் தெரிகிறது.

ஜெயகாந்தன் ‘சினிமாவுக்குப்போன சித்தாளு’ என்றொருகதையை எழுதியிருப்பார். அதில் வரும் இளம் சித்தாளு ஒருத்திக்கு வாத்தியாரென்றால் உயிர். அவளூர் டாக்கீஸுக்கு வாத்தியார் படம் வந்தால் பையன்களைப் போலப் போட்டிபோட்டுக் கொண்டு குறைந்தது பத்துத் தடவைகளாவது பார்த்துத் தீர்த்துவிடுவாள். விளைவு நாளாக நாளாக அவளுக்குத் தன் கணவனுடனான உறவுவின்போதும் வாத்தியாரே வந்து தன்கூட முயங்குவதைப்போலக் கற்பிதஞ் செய்துகொண்டு மகிழ்கிறாள். இவ்வேளையில் எதிர்வீட்டுக்கு சென்னையில் ரிக்க்ஷா வலிக்கும் இளைஞனொருவன் வாத்தியார் படம்போட்ட டி-ஷேர்ட் ஒன்றை அணிந்துகொண்டு வருகிறான். சித்தாளுக்கு அவனது சுருள்சுருளான கிராப்புத் தலையும் தூக்கிக்கட்டிய லுங்கி யினூடாகபாதி டிராயர் தெரிவதும், அவன் ஸ்டைலாக பீடி வலிப்பதும் எல்லாமே



அவனையுமொரு நவீன தோரணையுடனான வாத்தியாராக தோற்றங்காட்டவும் மனசை அடக்கமுடியாமல் அவன்மீதும் ஜொள்ளுவிட ஆரம்பிக்கிறாள். சித்தாளின் பலவீனத்தைப் புரிந்துகொண்ட அவ்விளைஞனும், 'நீ என்னோடு சென்னைக்கு வந்திடு, உன்னை நான் வாத்தியார் கிட்டயே கூட்டிப்போறேன்' என்று பசப்பி அவளை மெல்ல சென்னைக்கு நகர்த்திப்போய் சீரழிக்க முயல்வதாக அக்கதை நகரும்.

'அது புத்தனின் சிசுவல்ல' கதையில் வரும் மாயாவுக்கும்கிட்டமுட்ட இப்படியானசிக்கலொன்று வருகிறது. மாயாவுக்கு அகிலன் மீது ஆசை. மாயா தனக்கு வழிகாட்டும் சன்மார்க்க குருவென நம்பிக் கொண்டிருக்கும் குரு ஜிஜே, நீலமேகத்தை அவள் மணக்க வேண்டுமென்று நிர்பந்திக்கிறார். (அப்படி நிர்ப்பந்திபதற்கான காரணம் கதைக்குள் காணோம், இதைப்புதுமைப்பித்தன் வகையிலான பாய்ச்சலெனக் கொள்ளலாம்.) அவரது விருப்பத்தின் பேரில் மறுவார்த்தையின்றி நீலமேகத்தை மாயா திருமணஞ் செய்துகொண்டுவிடுகிறாள்.

சித்தாள்பட்டிக்காட்டுப்பெண்படிப்பில்லாதவள்; சமூகம் கற்பிக்கும் வாழ்வியல் நியதிகளென்ற கற்பு, ஒழுக்கக்கோட்பாடுகள், பண்பாட்டுத் தடைகள், நிஜமங்கள், எதுவும் அவளுக்கில்லை அல்லது அறியாதவள். மாயாவுக்கு அப்படியல்ல. தியானத்தின் பிரம்மமூர்த்தப் பொழுதுகளில் நீலமேகம் இருக்கும்போதே அகிலன் வந்து மாயாவுடன் குலவச் செய்கிறான். அதுவே மாயாவின் வார்த்தைகளில், 'ஒவ்வொரு புணர்ச்சியின்போதும் என் அனுமதி இல்லாமலே அகிலன் எனக்குள் வந்துபோகின்றான்.' அதுவே அவளுக்கொரு அகச் சிக்கலாகிறது. அவளுக்கான அச்சிக்கலை கிரியாயோகத்தின் வெளிச்சத்தில் கொஞ்சம் அலச விசாரஞ்செய்ய முயல்கிறார் பிரமிளா.

தியானத்தின் வழியில் இரண்டு ஆன்மாக்கள் சந்தோஷிப்பதுவும் குலவுவதும் சாத்தியந்தானாவெனக் குழம்புகிறாள் மாயா. இதை யாரிடம் கேட்பது?

ஒரு ஆண், ஒரு பெண்ணை மோகிக்கிறான் என்றால், அவனது ஒரு பார்வை, ஒரு உடலசைவில் பெண்ணானவள் புரிந்துகொண்டுவிடுவாள். ஆதலின் குருஜியின் உள்நோக்கத்தை மாயா புரிந்துகொண்டு விட்டிருப்பாள். ஆனால், அதை வாசகனும் புரியும் விதமான காட்சிப்படுத்தல் கதைக்குள் எதுவும் வரவில்லை.

புத்தனின் சிசுவல்ல மாயாவுக்கு ஒவ்வொரு தியானத்தின் பிரம்மமூர்த்தப் பொழுதுகளில் / பேரின்ப நிலைகளிலும் அவளது முன்நாட் காதலன் அகிலன் வந்துவந்து குலவுவதை மாயா அவளது கணவன் நீலமேகத்துக்குச் செய்யும் துரோகமாக உணர்கிறாள்.

அகிலன் வந்து குலவுவது நிஜமேயெனில் குருஜியும் அதை அறிந்திருப்பாரே? அவ்வாறு அறிந்தால் அவர் அகிலனையும் தண்டித்து... என்னையுமொரு புனிதங்கெட்டவள் எனச் சபித்துவிடுவாரேயென்று மாயா கலங்குகிறாள்.

அவளது அகச்சிக்கலைக் குருவுக்கு விளக்கி அந்த இம்சையிலிருந்து விடுபடலாமென்று அவ் யோகக் குருவிடம் ஆலோசனை கேட்கவந்தால், "இந்த மாசம் பௌர்ணமி தினம். பிரம்மமூர்த்தப் பொழுதின் தருணம் கருவுக்கான நேரமாயிருக்கலாம் மாயா" என்று மாயாவைக்கூட விழைகிறார்.

குருவின் சந்நிதியில் புத்தனின் துறவு, யசோதாவின் தனிமை, புனித வாழ்வெனும் சம்வாதம் நிகழ்ந்த ஒரு பொழுதில் குருவிடமே அகிலன் விவகாரத்தை மாயா தெரிவித்துவிடவும் கடுஞ்சினமடையும் சன்மார்க்க குருஜி அவளை, "இழிகுலத்து நாயே... கண்ட நாயோடெல்லாம் புணர்கிறேனென்று என்னிடமே சொல்லுகிறாயா" என்று பழித்துரைப்பதுவும், உன் கர்மாவென்று கர்மாவை அழுத்துவதும் முரண்நகைக்குரிய இடங்கள்.

மேற்படி கதையானது ஒரு குறுநாவலுக்கான வெளியைக் கொண்டிருந்தும் அதையொரு சிறுகதையாகவே திடுப்பென பிரமிளா முடித்துவிட்டார்.

'நீலி' கதையும் பாத்திரங்களும் உரையாடல்களும் கற்பனையினூடான படிமங்களாகவே நகர்த்தப்பட்டிருக்கின்றன. ஆண் - பெண் ஆணவம் / தன்முனைப்பு (Ego) விளைவாகவரும் உரசல்கள், அவற்றின் விளைவுகள் அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

ஒருமுறை மிகவும் படித்த ஒரு எழுத்தாளருடன் (பெண்) பேசிக் கொண்டிருக்கும்போது அவர் சொன்னது எனக்கு அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது. "எனக்குத் தலையை 'குறொப்' பண்ணிக்கொண்டு அல்லது விரித்துபோட்டுக்கொண்டு எப்போதும் கருப்பாக உடுத்திக்கொண்டுள்ள பெண்ணியவாதிகள் பேசும் எல்லாக் கருத்துக்களுடனும் உடன்பாடில்லை. என்னைச் சரியாகப் புரிந்துகொண்ட என் கணவன் 'ஏன்டி என் ஷேர்ட்டின் பட்டனைத் தைத்து வைக்கல்லை" என்று அதிகாரம் பண்ணுவதைத்தான் நான் விரும்புகின்றேன்."

ஒருமுறை கிருபானந்தவாரியார் சொன்னதும் கூடவே ஞாபகம் வருகிறது, "நான் பிம்பிளாஸை ஆலாபனை பண்ணப்போ அதை வயலின்காரர் ஆபேரின்னு புரிஞ்சிட்டு இழுத்திண்டுபோனால் நானும் ஆபேரிக்கே வந்துமேலே பாடறதில்லையா அதே மாதிரி பொம்பளை சொல்றதைக் கேட்கமாட்டேன்னு பிடிவாதமாயிராத... அவள் சொல்றது நியாயமாயிருந்தாக்க கேட்டிட்டுப்போ, வாழ்க்கையில உரசல்கள் இராது. மத்தவன் பொண்டாட்டித்தாசன்னு சொல்வானேங்கற சிந்தனை உனக்கு வேண்டாம், வாழ்க்கை நிம்மதியாய்ப் போகணும். அதுதான் முக்கியம்."

நீலி கதையில் பிரமீளா பிரதீபன் காட்டுற கோணம் வேறு மாதிரி. 'தன்னை ஒரு ஆடவன் அடக்கியாள்வதை வேண்டுமானால் ஒரு பெண் விரும்பாமலிருக்கலாம். ஆனால், தன்னை அவன் வியக்கும் ஆளுமையுடன் எதிர்கொள்ள வேண்டுமென விரும்புதல் அவளது மிக இயல்பான விருப்பமாகத்தான் இருக்கமுடியுமல்லவா?'

இன்னும் அகோரிணியட்சி நீலியென்று அசுரபலம் வாய்ந்த பெண்களையெல்லாம் படிமங்களாகக் காட்சிப்படுத்துகிறார் பிரமிளா.

இக்கதையில் ஒரு இலட்சிய ஆணாக உருவகப்படுத்தப்படும் தேவனின் கூற்றாக, 'நீலி இது ஒருவகையில் அவரவர்க்கான கர்மாவின் பயன் என்பதுதானே உண்ம' என்றியம்புதல் பிரமீளாவுக்கும் கர்மா மீதான பிரமிப்பென்று கொள்ள இடந்தருகிறது. ஆனால், பின் நவீனத்துவம் நம்பிக்கைகளைப் படைப்புக்குள் அனுமதிப்பதில்லை.

தலைப்புக்குரிய கதை 'விரும்பித்தொலையுமொரு காடு'. ஒரு பெண்ணின் பார்வையில் அவர்கள் புகுந்துகொள்ளும் திருமணவாழ்வு எனும் அவத்தை (Phase) எப்படி அவர்கள் விரும்புவது மாதிரி / எதிர்பார்த்த மாதிரி இல்லாமல் போகிறது என்பதைப் படிமங்களூடாகச் சொல்லிச் செல்கிறது.

திருமணபந்தத்தில்நுழைவதைத்தவிர்க்கமுடியாது, விருப்பத்தையும் மீறி அதற்குட் செலுத்த ஆயத்தங்கள் நடைபெறும்போது மௌனமாயிருப்பதைத் தவிர வேறென்ன செய்யலாம் என்று சொல்லப்படுகிறது. நடுவில் அந்த மரமும் அப்படித்தான் இந்தப் பூச்சியும் அப்படித்தான், என்றான பலவகை காட்சி விஸ்தரிப்புகளுக்குப் பின்னாலும் கதையின் இறுதிப் பகுதியில் மீளவும் யாருக்கேனும் இதுவொரு சம்பவமாகவோ அல்லது அடுத்து வரப்போகும் நிகழ்வின் (வாழ்வின்) பகுதியாகவோ இருப்பின் அதற்காக என்னால் என்ன்செய்யமுடியும், மௌனமாக இருப்பது மாத்திரந்தானே? என முடிக்கும்போது சித்திரத்தைப் படிக்கும் அலர்

அகவையருக்கு திருமணம் மீதான ஒரு பயத்தை ஏற்படுத்திவிடும் அபாயமும் இருக்கிறது.




அம்பையின் கதைகளில் வருவதைப்போன்று, பெண்களை அடக்குவதால் இன்பந் துய்க்கின்ற ஆணாதிக்கத்தைச் அனுபவிப்பதாக எண்ணும் ஆண்கள் எல்லாக் கதைகளிலும் வருகிறார்கள். ஆனால், அவர்கள் எவரும் விதியேயென்று தம்மையே நொந்து பிலாக்கணம் வைத்துப் புலம்புவதுடன் நின்றுவிடுவதில்லை. அக்கிரமங்களுக்கெதிராகப் போராடவுஞ் செய்கிறார்கள். ஆனாலும் பிரமீளா இப்படியே தொடர்வாராகில் இவர் இந்தப் பிரச்சனை பற்றி இப்படித்தான் எழுதுவாரென்று வாசகர்களால் முத்திரை குத்திவிடப்படும் அபாயமுமிருக்கிறது.

எனக்கென்னவோ பிரமிளா புலம்பெயர்ந்து வந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அப்படி வந்திருப்பாரானால் அவரது பார்வைகள் இன்னும் விசாலித்திருக்க. கதைகளின் பகைப்புலமும் கருக்களும்பாத்திரங்களும் மாறியிருந்திருக்க,இன்னும் அசத்தலான படைப்புகள் பலவற்றைத் தந்திருப்பார்.

ஜில் ப்ராட்லி, கமிலே டொன்சியுக்ஸின் தோடுகள் போன்ற கதைகளைப் படிக்கையில் பிரமிளாவுக்கு பன்னாட்டு இலக்கியங்களுடனும் பரிச்சயமிருப்பதை உணரமுடிகிறது. உள்நாடாயிருந்தாலென்ன வெளிநாடாயிருந்தாலென்ன, வசதியானவளாயிருந்தாலென்ன, விளிம்புநிலை வாசியாயிருந்தாலென்ன பெண்களுக்கு காதுத்தோட்டையும் அடகு வைக்கவேண்டிய நிலமைகள் வந்துவிடுகின்றன. அப்படி அடகாகும் தோடே பேசுவதும் அழகான கற்பனை.

உரப்புழுக்கள் கதையின் நாயகி சுரேகாவும், அது புத்தனின் சிசுவல்ல மாயாவுமாக பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் இவ்விரண்டு கதைகளிலும் ஒன்றாக இருப்பதைக் காணலாம். முதலாவதில் சுரேகா, அவனது கண்காணிப்பாளர் இவளுக்கு உரம் அள்ளும் கிடங்கிலிருந்து பணியை வேற்றிடத்தில் மாற்றிப்போடுவதற்கு இவளிடம் பாலியல் லஞ்சம் கேட்கிறார். அவரைப் பற்றி முறைப்பாடு செய்யப் மேலிடத்துக்குப் பெரியதுரையிடம் போனால் அவரும் கதைவைச் சங்கிலி போட்டுப்பூட்டிவிட்டு அவளைக் ‘கட்டிலுக்கு வா’ என்றழைக்கிறார்.

வார்த்தைத் தேர்வுகளில் அங்கங்கே சிறு கவனயீனப் பிழைகள் உண்டு. உரப்புழுக்கள் கதையில் அந்த உரமென்கிற வார்த்தை பொருத்தமாக அமையவில்லை. பொதுவாக விவசாயத்தில் உரம் என்பது அசேதன உரங்களைத்தான். (inorganic fertilizers such as anhydrous ammonia, urea, urea-ammonium nitrate solutions, ammonium phosphates, and muriate of potash). அவற்றுக்குள் எந்தப் புழுக்களும் உயிர்வாழ முடியாது, அவிந்தே இறந்துவிடும். செம்பனைகளின் பகுதிகளோடு அசேதன உரங்களைக் கலந்து பெறப்படுவதைக் கூட்டுப்பசளை (compost : decayed organic material used as a fertilizer for growing plants.) என்றுதான் சொல்லப்படும். அதற்குள் புழுக்கள் வாழச்சாத்தியம்.

இன்னும் சிங்கள உரையாடல்களைத் தமிழில் எழுதும்போது வாக்கியங்கள் சில. எடுத்துக்காட்டாக: ‘அத்த கியப்பாங்’ என்பது ’எத்த கியப்பாங்’ என்றும், ‘ ஊவ மரலா நெவே’ என்பது ’ ஊவ மரலா நெமே’ என்றும் தட்டப்பட்டுள்ளன.

அதேபோல் சிராம்புகள் › சிலாம்புகள் என்றும், விளாறு › மிலாறு என்றும் தட்டப்பட்டுள்ளன. இச்சிறு தவறுகளால் படைப்புக்களின் தரத்துக்கோ கனதிக்கோ எவ்வித இடையூறும் ஏற்படவில்லை. இவை தவிர்ந்த தட்டுப்பிழைகள் அதிகமில்லாமல் இருப்பதும் இந்நூலின் சிறப்பம்சம்.

கதையைக் காட்சிப்படுத்துவதில் புதுமைப்பித்தனையொத்தவொரு வேகமும், புதிய உத்திகளைத்தேர்ந்துசொல்லும்முறையில் புதுமையும், எந்தப் பிரச்சினையானாலும் நேரடியாக எடுத்துப் பரப்பி வைத்து அலசுவதில் துணிச்சலையும் கொண்டுள்ள பிரமிளா பிரதீபன் எனக்குத் தமிழிலக்கியவானில் புதிதாகத் தோன்றியுள்ள விடிவெள்ளியாகத் தெரிகின்றார். இவரால் ஈழத்து இலக்கியம் கடுகிப் புதிய உயரங்களை எட்டும்!

“பொ. கருணாகரமூர்த்தி” <karunah08@yahoo.com>

---

விரும்பித்தொலையுமொரு காடு - பிரமீளா பிரதீபன்;
பக். 124; விலை ரூ. 150.00; வெளியீடு: யாவரும் பதிப்பகம்,
எஸ்ஜிபி நாயுடு வளாகம், வேளச்சேரி பிரதான சாலை,
தண்டீஸ்வரம் நகர், வேளச்சேரி,
சென்னை, தமிழ்நாடு - 600042

# ருமால் பாவாடையான கதை!

## விட்டல்ராவ்

தொலைப்பேசிஇணைப்பகங்களில்இளநிலை பொறியாளர்கள் தினசரி அலுவலக ரீதியான செலவினங்களுக்கு என என மாதந்தோறும் இலாகா அனுமதித்த குறிப்பிட்ட சிறு தொகையை (PETTYCASH)வாங்கிவைத்துக்கொள்ளுவார்கள்.அதை செலவழித்ததற்கான சகல விவரங்களையும் அதற்கான பிரத்தியேக படிவத்தில் எழுதி, செலவின்போது வாங்கின கடை பில்களை இணைத்து வைப்பார்கள்.

வெளி ஆட்களிடமிருந்துபெறும்சேவைகளுக்காக அவர்கள் பெற்றுக்கொள்ளும் கூலிக்கென பிரத்தியேக படிவங்கள் உண்டு. அதைப் பூர்த்தி சைய்து அவர்களின் கையெழுத்தையோ அல்லது கட்டை விரல் ரேகையையோ பதிய வைத்து இணைத்து அனுப்ப வேண்டும். அப்போதுதான் அடுத்த செலவினங்களுக்கான சிறு தொகை. கிடைக்கும். சில வேலைகளை தொலைப்பேசி இணைப்பகத்தில் பணிபுரியும்ஊழியர்களில்சிலர்ஏற்றுசெய்வதுமுண்டு. வெளியாருக்குதரும்சந்தர்ப்பங்களை தம் எக்ஸ்சேஞ்சு ஊழியர்களில் தகுதியானவர்களைக் கொண்டே செய்து முடித்துக்கொள்ளும்போது கற்பனையான பெயர்களின் பேரில் அதற்குத் தகுந்தாற் போன்ற கையெழுத்து அல்லது கட்டை விரல் ரேகையைப் பதித்து படிவத்தை அனுப்புவார்கள். அப்படியான சேவைகளுக்குத் தகுதியுள்ள, தொழில் வித்தை அறிந்தவர்கள் அதை மேற்கொள்ளுவார்கள்.

இணைப்பகங்களிலும் அலுவலகங்களிலும் பணிபுரியும் ஊழியர்களில் சிலருக்கு தச்சு வேலை, ரேடியோ பழுதுபார்த்தல், தையல் வேலை, மின்சார இணைப்பு, மின்சார சாதனங்கள் ஆகியவற்றில் ஒன்றிரண்டை அறிந்திருப்பார்கள். பழுதடைந்த மின்விசிறி, மின் சுவிட்சுகளை மாற்றவும் அறிந்திருப்பார்கள். தம் வீட்டில் தமக்குத் தெரிந்த தொழில் வித்தையைக்கொண்டு உழைத்து வருமானம் ஈட்டுவர்.

ராஜாமணி ஒரு மூத்த இளநிலைப் பொறியாளர். சாது - அமைதியான தன்மை - தொழில் திறமைமிக்க மனிதர்.



"வெளியாட்களுக்கு எதுக்கு தரனும், நமே ஸ்டாப்ஃலேயே அதே வேலை தெரிஞ்சவங்க இருக்கிறப்ப, அவங்களே செய்யலாம், அந்த சர்வீஸ் சார்ஜை அவங்களே வாங்கிகிட்டுப் போகட்டும்" என்பார்.

அப்படி இருக்கையில் அந்த சந்தர்ப்பம் என்னையும் தேடி வந்துவிட்டது.

"உங்கள பெயிண்டர்னு சொல்றாங்களே, நீங்க பெயிண்டரா சார்?" என்று என்னைக் கேட்டார் ராஜாமணி.

"ஆமா" என்றேன்.

"அப்போ, உங்க வீட்டுக்கெல்லாம் நீங்களே பெயிண்டடிச்சிடுவீங்களா?"

"அந்த பெயிண்டரில்லேயே, பெயிண்டர்னா, படம் போடற ஓவியர்னு அர்த்தம்."

"ஓகோ, சரி, ஓவியர்னா போர்டு எழுதறதுக்கும் வருமில்லே."

"வரும், ஆனா இதுவரை போர்டெல்லாம் எழுதியதில்லே."

"இப்போ எழுதுங்களேன். போர்டில்லே, எக்ஸேஞ்சு மெக்கானிக்கெளுக்கெல்லாம் சுவிச் ரூம் வேலைக்கானஇன்ஸ்ட்ருமெண்ட்ஸைவச்சிக்கிறதுக்கு டூல் கிட் பண்ணச் சொல்லி, ரெடியாகி வந்திருக்கு. நம்ம எக்ஸ்சேஞ்சிலே முப்பது மெக்கானிக்குங்க இருக்காங்க. முப்பது டூல் கிட்டு தயாராகியிருக்கு. கருப்பு வண்ணமடிச்ச ஸ்டீல் பெட்டிகள். வந்து பாருங்க."

நான் அவரைத் தொடர்ந்து ஸ்டோருக்குள் நுழைந்தேன். இராணுவப் பெட்டிகள் போல காத்திரமான ஸ்டீல் தகடுகளால் செய்யப்பட்டு, பூட்டி வைக்கும்படி பேட்லாக் இணைக்கப்பட்ட, அவர்கள் தொழிலுக்கான சகல கருவிகளையும் வைக்கும்படியான 'டூல் கிட்', அன்றைய ஸ்ட்ரோல்ஜர் வகை தொலைப்பேசி சுவிட்சுகள் (செலெக்டர்கள்) விதவிதமான பாகங்களைக்கொண்டிருக்கும். ஒவ்வொரு பாகத்தின் பழுதையும் சரி செய்ய அந்தந்த பாகத்தைக் கழட்டிப் பூட்டுவதற்கென்றே பிரத்தியேகமான, 'வைபர் பெண்டர்', 'ஆர்மெச்சூர் பெண்டர்', 'டக்பிஸ் பிளேயமர்', 'லாம்ப் எக்ஸ்ட்ராக்டர்', 'ஹீட்காய்ல் பிளேயர்' என்றெல்லாம்



ஏராளமான கருவிகள். தொலைப்பேசி கருவியும் அதன் உதிரிபாகங்களும் சுவிட்சுகள், அவற்றின் உதிரி பாகங்களோடு, அவற்றோடு போராடும் ஏராளமான கருவிகளும் பெங்களூர், ரேபரேலி, பாலக்காடு, ஸ்ரீநகர் முதலான நகரங்களில் உள்ள இந்திய டெலிபோன் இண்டஸ்ட்ரீஸ் (ITI) தொழிற்கூடங்களில் செய்யப்பட்டு வினியோகக்கப்பட்டன. இந்திய தொலைத் தொடர்புக்கு ITI பெரும் பங்களிப்பு நல்கியது. சுதந்திர இந்தியாவின் முதல் பொதுத்திறை தொழிலகமான ஐடிஐ 1948இல் ஏற்படுத்தப்பட்ட போது இந்திய அரசின் ஒரு இலாகாவாகவே இருந்து பிறகு 1950இல் ஒரு கம்பெனியாக மாற்றப்பட்டது.

ஒவ்வொரு மெக்கானிக்குக்கும் தனியாக பெட்டி வழங்கப்பட்டதால் அவரவர் பெயர், ஊழியர் எண் ஆகியவற்றை அவருக்கான கருப்பு நிற பெட்டி மீது வெள்ளை வண்ணத்தைக் கொண்டு அழகுற எழுதி வைக்க வேண்டும். ஒரு எழுத்துக்கு - இவ்வளவென்று கணக்குபோட்டு ஒருதொகைக்குபேசி என்னை எழுதி முடிக்க பணித்தார். எனக்கு அது சரியான தலைவழி. ஆனால், ராஜாமணிக்காக ஏற்றுக்கொண்டென். டூட்டி முடிந்த பிறகு இரண்டு மணி நேரம் இருந்து எழுதுவேன். ஒரு மெக்கானிக் தோழர் கேட்டார்.

“சார், எம் பேரு பக்கத்தில் சின்ன பூ ஒன்னையும் போடுங்க சார்.”

இன்னொருவர் கேட்டார், “சார் ஓவியர்தானே நீங்க, பழைய ஹிண்டு பேப்பர் பாத்திருக்கீங்களா, கொஞ்ச காலம் முந்தி, ஹிண்டுங்குற அழகான எழுத்துங்க ஞாபகமிருக்கா, காலிக்ரஃபியோ என்னவோ, அது போல் எம்பேரை எழுதுங்க..”

இந்த சமயம், லைன்மேன்கள் அவர்களுக்கு மேலுள்ள லைன் இன்ஸ்பெக்டர்கள்ன், பழைய காலம்போல தலைக்கு நிமால் குமால் சுத்தி கட்டிக்கொள்ள வேண்டும் என்று மேலிடத்து உத்தரவு வந்தது. ஆங்கிலேயர் காலத்தில் தந்தி சேவகர்களும் தபால்காரர்களும் அதன்பின் தொலைப்பேசி லைன்மேன் சிப்பந்திகளும் தலைக்கு ருமால் (முண்டாசு) கட்டிக்கொண்டுதான் டூட்டி பார்த்தார்கள். கிராமங்களில் உள்ளவர்களுக்கு தபால் தந்திப் போக்குவரத்தை வயல் வரப்புகளிலும் காடு மேடுகளிலும் ஓடியோடிச் சென்று சேர்த்து வந்த தபால் தந்தித்துறை ஊழியர்கள் ‘ஓடுபவர்கள்’ (ஸிஹிழிழிணிஸி) என்றே அழைக்கப்பட்டார்கள். தபால்காரர் போல ரன்னர்களும் ஒரு மத்திய அரசு ஊழியர். இவர்கள் அனைவரும் தலைக்கு ருமால் கட்டிக்கொள்ளவேண்டும். 50களில் சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரிப்பாக வெளிவந்த ‘திகம்பர சாமியார்’ திரைப்படத்தில் எம்.என். நம்பியார் பல மாறுவேடங்களில் வந்து துப்பறிவார். அதில் ஒரு வேடம் - தபால்காரர். அவர் தலைக்கு ருமால் சுத்தி கட்டியிருப்பார்.

ருமால் என்றால் வெறும் தலைப்பா அல்ல. ஓரடி ஒண்ணரையடி நீளத்துக்கு குருவி வால் போன தலைக்குப் பின்னால் ருமால் நீண்டு தொங்கும். வடக்கில், அரசியல் பிரமுகர்கள் சிலர் அரசாங்க விசேஷ நிகழ்வுகளின்போது, பிரச்சாரத்தின் போது, பின்னால் நீண்டு தொங்கும்படியாகந்தான் ருமால் கட்டுகிறார்கள். பழைய ஜெமினி நிறுவனத்தின் திரைப்படங்கள், ‘மங்கம்மா சபதம்’, ‘சந்திரலேகா’, ‘வஞ்சிக்கோட்டை வாலிபன்’ ஆகியதிரைப்படங்களில் ரஞ்சன், எம்.கே. ராதா, ஜெமினிகணேசன் என்போர் இவ்விதமாய்த்தான் ருமால் கட்டியிருப்பார்கள். இந்த ருமால் தனித்தனியே இரண்டு நிறங்களினால கதர் துணியால் ஆனதாயிருக்க வேண்டும். ஒன்று காக்கி, மற்றொன்று இரத்தச் சிவப்பு. ஒருவருக்கு இரண்டு ருமால்கள்.

பரங்கியலை தொலைப்பேசி இணைப்பகத்தைச் சேர்ந்த லைன்மேன்கள் மற்றும் எஸ்ஐகள் நாற்பது - ஐம்பது பேர் இருப்பார்கள். அவர்கள் யாவரும் இனி மேல் புது உத்தரவுபடி (ஏற்கனவே இருந்துவரும் விதிதான் என்றாலும் வெகுகாலமாய் விட்டுவிட்டார்கள்) ருமால் கட்டிக்கொண்டாக வேண்டும் என்பது மேலாளர் உத்தரவு. ராஜாமணி சார் இலாகா கிடங்குக்குப் போய் ஐம்பது பேருக்கான ருமாலுக்கு சிவப்பு மற்றும் காக்கிக் கதர் துணிகளைப் பெரிய பெரிய பொதிகளாய்ச் சற்றி வண்டியில் கொண்டு வந்துவிட்டார். தொட்டுத் தொட்டுப் பார்த்துவிட்டு சிலர், “முரட்டுக் கதர்”, என்றார்கள். இப்போது ராஜாமணி ஆளைத் தேடினார். மாணிக்கம்தான் ஏற்ற ஆள்.

“சார் மாணிக்கம், ருமால் துணி வந்தாச்சு. ஒவ்வொரு ருமாலும் ஒண்ணரை மீட்டர் நீளமிருக்கிறமாதிரி வெட்டி ஓரந் தைக்கணும். வெளியாளுங்களுக்கு காண்டிராக்ட் விடலாங்கிறாரு டி.ஈ. வேண்டாம், நம்ம எக்ஸ்சேஞ்சிலேயே ஆளிருக்குண்ணு சொல்லிட்டேன். சரின்னட்டாரு. நீங்க பொறுப்பை எடுத்துக்கங்க. அம்பது காக்கி, அம்பது சிவப்பு ருமாலுங்க. ஒன்னொன்னும் ஒன்னரை மீட்டர் நீளமிருக்கிற மாதிரி வெட்டி ஓரம் அடிக்கணும், அதாவது ஓரம் தைக்கனும். எவ்வளவு நேக்கறீங்க?”

பொறுப்பேற்பதற்கு ஒரு தொகையும், வெட்டித் தைக்க ஒரு தொகையும் மனக்கணக்குப் போட்டு இவ்வளவாகுமென்று கூறினார் மாணிக்கம். ராஜாமணி சரியென்று ஒப்புக்கொண்டு மாணிக்கத்திடம் துணியுருளைகளைக் கொடுத்துவிட்டார். இரண்டு வார கெடு. இப்போது மாணிக்கம் தையல்காரரைத் தேடினார். சட்டென்று கவனத்துக்கு வந்த பொன்னுசாமி கண்ணில் படவே யில்லை. எப்போதும் ஏதேனுமொரு விடுப்பில் இருப்பர். பொன்னுசாமி எக்ஸேஞ்சில் உட்கார்ந்து வேலை செய்யவே சலிப்பு காட்டுவார். டூட்டிக்கு வந்து வருகைப் பதிவேட்டில் கையெழுத்திட்டானதுமே அன்றைய டூட்டி முடிந்துபோனதான மன நிறைவுடன் என்னிடம் வந்து, “வாங்க சார் போலாம்”, என்பார். “எங்கே?” என்று கேட்டவுடன், “டீக்கு”, என்பார். தேநீர் குடிப்பதற்கு அவருக்கு நேரங்காலம் என்றில்லை.

அவர் வீட்டில் தையல் இயந்திரம் இருக்கும். அவர் குடியிருக்கும் பகுதியிலுள்ள பெண்கள் ரவிக்கை தைத்துக்கொள்ள ரவிக்கைத் துண்டுத் துணிகள் தருவார்கள். ஒரு நீண்ட மூங்கில் கழியைக் கட்டி தொங்கவிட்டு அதன் மேல் தைத்த - தைக்க வேண்டிய ரவிக்கைகளும் துண்டுத் துணிகளும் தொங்க விடப்பட்டிருக்கும். அளவு ரவிக்கைகளும் ‘இன்ஷியலோடு’ அவற்றோடு இருக்கும். அவ்வப்போது தைக்க வேண்டிய துண்டுத் துணியின் அளவு ரவிக்கை இடம்பெயர்த்து மாறி வேறு துணியுடன் சேர்ந்து மாறாட்டமாகிவிடும். அந்த சமயங்களில் அவர் பெண்களிடம் சிக்கிக்கொண்டு உண்டில்லை என்றாகிவிடுவார். தொலைப்பேசி இணைப்பகத்தில் பணிபுரியவர்கள் சிலர் வீட்டில் தையல் மெஷின் இருக்கும். அவர்கள் இரண்டு காரணங்களுக்காக பொன்னுசாமியை வீட்டுக்கு வரச் சொல்லுவார்கள். ஒன்று அவர்கள் வீட்டு மெஷின் சரியாக வேலை செய்யாது.

“லூப்பு விழுதுங்க”, என்பார் ஒருவர்.

“பாபின் மாத்திப் பாக்கனும்” என்பார் பொன்னுசாமி.

வீட்டுக்கு எந்து ரவிக்கைகள், குழந்தைகள் சட்டைகள் தைத்துத் தர அழைப்பார்கள். சில வீடுகளில் வேறு ஒரு வேலையிருக்கும். அதைப் பொன்னுசாமி ‘படா பேஜாரு” என்று தட்டம் கழிக்க பார்ப்பார்.

“ஆல்ட்ரேஷன் செய்யனும், மூன்று பேண்ட்”, என்பார்கள். வேலை சுலபந்தான். ஆனால் உட்கார்ந்து தையல் பிரிப்பதென்பது கோழியின் இறகுகளைப் பிடுங்குவது மாதிரி என்பார் பொன்னுசாமி.

அவரது மனைவி நல்ல நிறமும் ஆழகுமா யிருப்பார். திடீரென்று அந்தம்பாளுக்கு பேய் பிடித்திருப்பதாகச் சொல்லி பொன்னுசாமி அழத் தொடங்கினார். எங்கள் பரங்கிமலைத் தொலைப்பேசி தொடர்பகத்தின் லேன்மேன்களில் சிவபாதம் குறிப்பிடத்தக்கவர். மதுராந்தகத்திலிருந்து ரயிலில் வந்து டூட்டி பார்ப்பவர். சிவபாதம் தம் சிற்றூரில் ஆதிதுலுக்கானாத்தம்மன் கோயிலில் பூசாரி உத்தியோகமும் பார்க்கிறவர். பம்பையடித்து பேயும் ஓட்டுவார். பெண்கள் போல நீண்டு வளர்ந்த முடியை அள்ளி வாரி கொண்டை போட்டிருப்பார். நெற்றியில் பழைய காலனா அளவுக்கு குங்குமப் பொட்டு. அவரிடம் பொன்னுசாமி ஆலோசித்ததில், ஆதி துலுக்காணத்தம்மன் கோயிலுக்கு அழைத்து வரச் சொன்னார். பொன்னுசாமியும் அவ்வாறே ஒரு சனியன்று தம் மனைவியை அழைத்துப் போய் காட்டிப் பார்த்ததில், சிவபாதம் பம்பையடித்து பேயை உசுப்பிவிட்டு பேச்சு கொடுத்து, குலம் கோத்திரம் ஊர் பேர் கேட்டதில், அந்தம்மாள் மீது ஒன்றுக்கு, மேற்பட்ட பிசாசுகள் பிடித்துக் கொண்டிருப்பதாயும் அதில் ஒன்று இஸ்லாமிய பிசாசு என்றும் அறிந்துவந்து பொன்னுசாமி எங்களிடம் தெரிவித்து மேலும் அழுதார். எங்கள் தொழிற்சங்கத் தலைவரும் பொதுவுடைமைக் கட்சியை சேர்ந்தவருமான சுந்தரமூர்த்தி, “அதல்லாம் சும்மா, மனநோய் விஷயமானது, மனநோய் நிபுணரைப் பார்த்தால் சரியாகிவிடும்” என்றார். “தனக்குத் தெரிந்த மனநோய் டாக்டரிடம் போகலாம்” என்றார். அதையெல்லாம் நிராகரித்த பொன்னுசாமி சிவபாதத்தையே கெஞ் சினார். அவர் மூன்று பேய்களை ஒவ்வொன்றாக எழுப்பி வரவழைத்து விரட்டியடிக்க ஒரு மண்டலம் (40 நாட்கள்) கால அவகாசம் தேவைப்படுமென்று கூறி, ஆதிதுலுக்காணத்தம்மன் கோயிலேயே விட்டு வைக்குமாறு கூறி, துணைக்கு தன் மணவி இருப்பாள் என சமாதானம் கூறினார். அவர் யோசனைகள் எதையும் உடனே ஏற்பவராகவே பொன்னுசாமியுமிருந்தார்.

“கோயில்லே இருக்கிறவரை நல்லாயிருக்காங்க. வூட்டுக்கு வந்தா பழையபடி ஆயிட்றாங்க. இந்த வூடுதாங்க ஆகல. வூட்ட மாத்தலாம்னு”, என்றார். தெருக்கூத்துக் கலைஞருமான சிவபாதம், கூத்தில் பெண் வேடம் கட்டுமவர். அவருக்கான பாவாடை, ரவிக்கை தினுசுகளை கூலி வாங்காமலேயே பொன்னுசாமி தைத்துக் கொடுப்பவர். மனைவியை அவ்வப்போது கோயிலில் கொண்டுபோய் விட்டு வைப்பதும், அலைவதுமாயிருக்கும் பயம் - குழப்பம் -

சதாயோசனை, அவநம்பிக்கை சந்தேகப் பிசாசுகளால் பீடிக்கப்பட்ட பொன்னுசாமியை மாணிக்கம் நலம் விசாரித்த கையோடு விஷயத்துக்கு வந்தார்.

"பொன்னுசாமி, ருமால் தைக்கணும், அம்பது ரெட் கலர், அம்பது காக்கி. ருமால் ஒவ்வொன்னும் ஒன்றரை மீட்டர் நீளமிருக்கோனும், லைன்மேன், எஸ்ஐகளுக்கு."

"தெரியிது" என்று சொல்லிவிட்டு, "இப்ப வூட்ல ஒடம்பு சரியாயில்லே, கோயில்ல உட்டிட்டு வந்திருக்கேன். அலைச்சல் திரிச்சல் அகாலபோஜனம். சட்டுபுட்டுன்னு தச்சிருன்னு நின்னாக்கா ஆவாது பாஸ்", கூறினார் பொன்னுசாமி.

"சரி, எவ்வளவன்னு சொல்லுங்க."

பொன்னுசாமி ஆகாயத்தில் கணக்குப் போட்டுவிட்டு, "இவ்வளவு ஆவும், ஒரு ருமாலுக்கு அவ்வளவு."

"ஜாஸ்தி."

"இல்லே மாணிக்கண்னே. வேலையிருக்கு."

"ஜாஸ்தியா, சும்மா வெட்டி அடிக்கறதிக்கா அவ்வளவு கேக்கறே?"

"இல்லண்ணோ, வேணும்னா வெளியில கேட்டு பாருங்க. கூட கேப்பாங்களேங்காட்டி குறைவா யிருக்காதண்ணே."

"நம்ம துணி, நம்ம டிபார்ட்மென்ட் லைன்ஸ் ஸ்டாஃபுங்களுக்கு ருமால். நம்மாளு நீ. பாத்து கேளு, எனக்கும் ஏதாச்சி காசு நிக்கணுமேப்பா" என்றார் மாணிக்கம்.

ஒருவாறு இருவருக்கும் பேரம் படிந்துபோய் சிவம்பு மற்றும் காக்கித் துணி மூட்டைகளை பொன்னுச்சாமி பெற்றுக்கொண்டு போய் வீட்டில் அளந்து பார்த்தபோது ஐம்பது மீட்டர் என்று சொல்லித்தந்த கதர் துணிகள் இரண்டும் ஐம்பத்தைந்து மீட்டர் அதிகமாகவே இருந்ததைக் கண்டு ஒரு பக்கம் திகைப்பும் மறுபக்கம் சந்தோஷமும் அடைந்தார் பொன்னுசாமி. முதலில் ஒரு முக்கால் மீட்டர் நீளத்துக்கு துணியை வெட்டி தன் தலைக்கே ருமாலாக சுத்தி, பின்புற பிடரியில் வாலாக நீண்டிருக்குமாறு கட்டிப் பார்த்தார்.

உடனே தம் மகனை அழைந்தார்.

"டேய் பஞ்சு, எப்டிடாயிருக்கு?"

பஞ்சு தன் அப்பாவை ருமாலில் பார்த்து அதிச யித்தவனாய், "பின்னால திரும்புக் காட்டு", என்றான்.

பொன்னுசாமி பின்னழகை காட்டினார்.

"சூப்பர்ப்பா. சும்மா ராஜகுமாரன் கணக்கா யிருக்கே" என்றான் பஞ்சு.

எனவே, ஒவ்வொரு ருமாலும் முக்கால் மீட்டர் நீளத்தில் இருக்குமாறு துண்டுத் துண்டாக துணிகளை வெட்டி வைத்துக்கொண்டு தொழிலில் இறங்கினபோது கோயிலிலிருந்து ஆள் வந்தார்.

"உடனே புறப்படன்னை", என்றார் வந்தவர்.

"டேய் பஞ்சு, முக்கா முக்கா மீட்டர் போல வெட்டி வைடா. எல்லாத்தையுமில்லே" என்று கூறிவிட்டு அதிகப்படியான துணியை கத்தரித்து சுருட்டி பிரோவில் வைத்துவிட்டு புறப்பட்டுப் போனார்.

இரண்டு வாரங்கள் மிக மிக அதிகமாய்ப்பட்டது. ஒரே வாரத்தில் மொத்த ருமால்களும் தயார். அவற்றை எடுத்து வந்து மாணிக்கத்திடம் கொடுத்துவிட்டு தன் தையற் கூலியை பெற்றுக்கொண்ட பொன்னுசாமி ஒரு ருமாலை எடுத்து மாணிக்கத்தின் தலைக்கே கட்டி விட்டு அழகு பார்த்தார்.

"சும்மா மார்வாடி ஜமீந்தார் கணக்கா தெரியீறீங்க அண்ணே?" என்றார்.

மறு வாரம் பொன்னுசாமி தொடர்பகத்திலுள்ள பதினைந்து பெண் ஊழியர்களையும் உணவு இடை வேளையில் சந்தித்து பேசிக் கொண்டிருந்தார்.

ரொம்ப மொரட்டுத்தனமா இருக்காதா, கதராச்சே?" என்று கேட்டார் ஒரு தோழியர்.

"இருக்காது மேடம், பாருங்க காட்டறேன்." என்று கூறிவிட்டு பையிலிருந்து ஒருதுண்டு சிவப்பு கதர் துணியை வெளியிலெடுத்து நீட்டினார். அந்த பெண் ஊழியர் அதை ஓரமாய் தொட்டு கசக்கி பார்த்துவிட்டு சரியென்று தலையாட்டினார்.

"பத்து ரூபாதான் மேடம். கடையில் ரெடிமேட் வாங்கினாலும் சரி, துணி வாங்கித் தச்சாலும் சரி கூலியே பத்து ரூபா ஆவுமே" என்றார் பொன்னுசாமி.

"சரிசரி, நாளைக்கு அளவு பாவாடை கொண்டுவந்து தர்ரேன்", என்றார் அந்த முத்த தோழியர்.

அவரே மற்ற பெண் ஊழியர்களுக்கும் உடனடியாக செய்தி ஒலி பரப்பிவிட்டார். எனவே, பொன்னுசாமியின் வேலை சுலபமாகிவிட்டது.

"ஏய் சொர்ணம். நீ பாவாடை வாங்கிக் கட்டுறியா, தச்சி கட்டுறியா?"

"ஏன் மேடம்?"

"தச்சி கட்றதாயிருந்தா, நம்ம பொன்னுசாமி சார் தச்சி விக்கிறாரு. ஒரு பாவாடை ஜஸ்ட் பத்திரூவாதான். அந்த 'ரேட்டுக்கு கிடைக்கவே கிடைக்காது..." என்றார் அந்த மூத்த பெண் ஊழியர்.

"என்ன மாதிரி துணி?

“காதி..”

“என்ன கலர்?”

“இரண்டே கலர்தான். சிவப்பு, காக்கி கலர்.”

“ஐய்யே, லைன் ஸ்டாஃபுங்களுக்கு ருமால் தைக்குறதுக்கு மாணிக்கம் சார் குடுத்த துணியாயிருக்கும்?”

“இருக்கட்டுமே, பத்து ரூபாயில பாவாடை.”

“யாராச்சும் பாத்தா சிரிக்க மாட்டாங்களா?”

*உள்ளேதானே கட்றோம், யாரு பாப்பாங்க.”

ஓர் ஆறேழு பெண் ஊழியர்கள் பொன்னுசாமியிடம் பாவாடைத் தைத்துக்கொள்ள ஆர்டர் கொடுத்திவிட்டு அளவுப் பாவாடையாக தங்கள் பாவாடையையும்எடுத்துவந்துதந்தார்கள்.இதுயாவும் காதும் காதும் வைத்தாற்போல ஆண் ஊழியர்களுக்கு தெரிமாமலேயே உணவு இடைவேளையில் நடந்து வந்த விவகாரம். சில பெண்கள் தங்கள் பெண்களுக்கும் சேர்த்து மூன்று மூன்று பாவாடைகளுக்கு ஆகுமா என்று கேட்டார்கள். ஒருவருக்கு இரண்டுதான் முடியுமென்றும் ஆறு பெண்களின் ஆர்டரோடு கையிருப்பு துணியும் தீர்ந்து போனதாகச் சொன்னார் பொன்னுசாமி.

அளவுப் பாவாடைகளை வைத்து துணிகளைக் கத்தரித்து வைக்கும்போது, ஆதிதுலுக்காணத்தம்மன் கோவிலிலிருந்து ஆள் வந்திவிட்டது. பொன்னுசாமி புறப்படுவற்கு உடை மாற்றிக்கொண்டு மகன் பஞ்சாபகேசனை அழைத்து கூறினார்.

“பஞ்சு, எல்லாம் ரெடியா? கட் பன்ணி வச்சிறக்கேன் பாவாடை அடிச்சிப் போடுவியா?”

பஞ்சு தன் அப்பாவை ஒரு கணம் பார்த்துவிட்டு பாவாடைக்காக வெட்டி வைக்கப்பட்ட கதர் துணிகளை நோட்டம் விட்டபடியே சொன்னான்.

“பாவாடை இதுவரை தச்சதில்ல. நீ கொண்டு வர ஆல்ட்ரேஷன் சட்டை, பாண்ட்டுக்கு தையல் பிரிக்கிறது பிரிச்சி தைக்கிறது தான் பழக்கம்.”

“ஒருமாடல் பாத்துக்க. பாத்துதை” சொல்லிவிட்டு பொன்னுசாமி புறப்பட்டு போனார். இரவு வெகு நேரம் கழித்து மனைவியை அழைத்துக்கொண்டு வந்த பொன்னுசாமி, பஞ்சுவை விசாரித்தார்.

“ஆச்சிப்பா, கட்டி வச்சிருக்கேன்” என்றான்.

மறுநாள் ஆறு பெண் ஊழியர்கள் கொடுத்திருந்த ஆர்டரின் பேரில் சிகப்பிலும் காக்கியிலும் எட்டெட்டு பாவாடைகளை எடுத்துக்கொண்டு வந்தார். பஞ்சு அவற்றை அளவு பாவாடைகளோடு வைத்து பெயர் எழுதின சீட்டை வைத்து நன்கு கட்டி வைத்திருந்ததை அவர்களுக்கு வினியோகத்து பணமும் வாங்கிக் கொண்டார் பொன்னுசாமி. கையில் பணம் இருந்தால் அவரைக் கண்டுபிடிக்க முடியாது.

“மேடம், எல்லாம் வீட்டுல போயி பாருங்க. இங்க வேணாம். ருமால் துணியில தச்சிட்டான்னு வயிறு எறிஞ்சி போவாங்க. அப்பாலே ராஜாமணி சாருக்குத் தெரிச்சா பேஜாரா போயிடும்” என்றார் பொன்னுசாமி.

ஊழியர்கள் எடுத்துச் சென்றுவிட்டனர். பொன்னுசாமி வந்த காசில் மூன்று பேரை அழைத்துச் சென்று தேநீர் விருந்தோம்பல் செய்வித்தார்.

மறுநாள், ஒரு பெண் ஊழியர் டூட்டிக்கு வந்ததும் கேட்ட கேள்வியில் கடுகடுப்பு வெடித்தது.

“எங்க அந்த பாவாடை ஸ்பெலிஸ்ட் டெய்லர்?”

“யோவ் பொன்னுசாமிக்கு என்ன டூட்டின்னு பாரு.”

“அவரு ரெண்டு நாளைக்கு லீவு மேடம்.”

“ருமால் தச்சி குடுத்த காசு தீர்த்திட்டு வருவாரு.”

மூன்றாவது நாள் பொன்னுசாமி வந்துவிட்டார். உணவு இடைவேளையில் அவரிடம் பாவாடை தைத்துக்கொண்ட பெண் ஊழியர்கள் தங்கள் ஓய்வறைக்கு அவரை அழைத்து கச்சேரி வைத்தார்கள்.

“முன்னே பின்னே பாவாடை தச்சிருக்கீங்களா?”

“தச்ச பாவாடைய பாக்கமமே எடுத்தாந்தீங்களா சார்?“

“பொண்டாட்டிக்கு மனநோய்னா, எங்களுக்கு என்னாச்சி?”

“நீங்களும் கோயில்ல போய் ஒக்காருங்க?”

“பையனை நம்பி எதுக்கு தைக்கச் சொன்னீங்க?”

“சின்னுப்பையன், பாவாடை எப்படி இருக்கும்னே தெரிஞ்சிருக்காது, பாவம்?”

“தலைகாணிக்கு ஒறை தச்சாப்பல.”

எல்லா பாவாடைக்களையும் எடுத்து, பெண்கள் ஓய்வறையில் உள்ள சாப்பாட்டு மேஜை மீது விரித்துப் போட்டார்கள். அவை எதுவுமே சருக்கம் (டக்கு பிடிக்காமல்) வைத்துத் தைக்கப்படாமல் தலையணைக்கான உறை போன்று இருந்தன். மகனைக் கடிந்துகொள்ளாமல் எல்லாவற்றையும் வீட்டுக்கு எடுத்துச் செல்ல அப்படியப்படியே கட்டி வைத்துவிட்டு கெஞ்சினார் போல் கேட்டுக் கொண்டார்.

“ரெண்டு நாள் டைம் குடுங்க மேடம். ஒழுங்கா டக்கு புடிச்சி தைச்சி எடுத்தாறேன்?”

(தொடரும்)

# மதுரை சத்யா கவிதைகள்



1
வேலையின் நிமித்தமாக
வெளிநாடு வந்தபின்
அலைபேசியின் வழியாகத்தான்
விருந்துகள் பரிமாறப்படுகிறது
உறவுகள் அழைக்கும்
அத்தனை விசேசங்களுக்கும்
வங்கி கணக்கின் மூலமாகத்தான்
என் இருப்பை
சமன்செய்ய முடிகிறது.

2
பலூனை பெரிதாக ஊதுகையில்
காது பொத்திக் கொள்கிற மனிதர்களின்
அனிச்சை செயல் தான்
பெரிய வாக்குறுதிகளோடு வரும்
நேசத்திற்கும்
வேண்டியதாகிருக்கிறது.

3
சினிமாக் கதாநாயகர்கள்
வில்லன்களை
ஒற்றைக்கையால் தூக்கிச்
சுவற்றில் நிறுத்துவதைப் பார்த்த
மகள் தன்னிடம் இருக்கும்
பொம்மைகளை எல்லாம்
அவ்வாறே மேல் தூக்கி முறைக்கிறாள்
தூக்குவதற்கு
இரண்டு கைகள் தேவைப்படும்
பொம்மைகளை மட்டும் அவள்
தனக்கான
வில்லனாகப் பார்ப்பதே இல்லை.

4
சிறகுலர்த்த வழியற்ற
மழை நாட்களில்
கடல் தாண்டும் பறவைப்
பற்றிய சிந்தனையின் போது
குடை மறந்துப் போன
பிள்ளைகளின் நினைவு
துயரத்தின் சமன்செய்ய முடியா
இச்சுயநல மனதைக் கொண்ட
என்னை நானே
ஒருபோதும் மன்னிப்பதில்லை.

5
உணவை நீட்டிக் கொடுக்கும்
சிறு கைகளுக்குப் பயந்து
காகம் அருகே வரத் தயங்குகிறது
தன்கையால் ஊட்டிவிட
அடம்பிடித்து அழும்
மகளுக்காக வேண்டி
காகத்தின் பாசை அறிந்திருக்கலாம்
கையறு நிலையில்
நானும் தவிக்கிறேன்.

**மதுரை சத்யா** <sathyasurrey@gmail.com>

# சிக்கோவும் பீல்லும்

## சஞ்சயன்

எனக்கு சஞ்சயன் என்று பெயரிட்டது அம்மாவின் நெருங்கிய தோழியான ராசு ஆன்டி. கொழும்பில் அவரது வீட்டில்தான் முதன்முதலாக அல்ஷேசன் நாயைக் கண்டேன். அந்நாட்களில் எனக்கு எட்டு வயதுக்கு அதிகமில்லை. சிக்கோ குரைத்தால் நெஞ்சு அதிரும். அப்போதுதான் நாய்கள் பற்றிய பிரமிப்பான பிம்பம் எனக்குள் வந்திருக்க வேண்டும்.

எனது தந்தையார் இலங்கையின் காவல்துறையில் பணியாற்றியவர். எனது பத்து வயதுக்குள் நான் அவரைப்போன்ற ஆங்கிலப் புலமையுடனுடம் சீனிவாச இராமானுஜனை விஞ்சிய கணித அறிவுடனும் இருக்க வேண்டும் அவர் விரும்பியதால், அவரும் நானும் கல்லும் நாயும் போன்றானோம். என் காலத்து அப்பாக்களும் மகன்களும் அப்படித்தான். அதை விடுங்கள்.

ஒரு நாள் துப்பறியும் நாய்கள் வந்திருக்கின்றன என்று என்னை அழைத்துப்போய், மண்ணிறத்திலும் கறுப்பு நிறத்திலும் இருந்த அவற்றின் ஒழுக்கம் பற்றியும் நுகரும் திறன்பற்றியும் அவை தம் எசமானர்கள் தரும் உணவை மட்டுமே உண்ணும் என்றும் சொல்லித் தந்தார். அவற்றின் தோற்றத்துக்குப் பயந்து அப்பாவின் பின்னால் நின்றுகொண்டேன். பாய்ந்து கடித்தால் முதலில் அவரைக் கடிக்கட்டும் என்ற நல்லெண்ணத்தைத் தவிர வேறு எதுவுமில்லை.

அன்று, "எனக்கும் நாய் வேண்டும்" என்று அப்பாவிடம் சொன்னபோது, நாக்கு மேல் அண்ணத்தில் ஒட்டிக்கொண்டது. அவர் பார்த்த பார்வையின் பின், நான் அவரிடம் ஒரு போதும் நாய் பற்றிய பேச்சை எடுத்ததே இல்லை.

அவர் இறந்தபின், தம்பி ஒரு அல்ஷேசன் நாயை எடுத்து வந்து வளர்த்தான். ராசு ஆன்டியின் சிக்கோவின் பெயரையே அதற்கும் வைத்தேன். சிக்கோ எனக்கு ஆதர்சம் அல்லவா?

எங்களின் சிக்கோ சிங்கம்போன்று சிலுப்பிக்கொண்டு கொண்டு நிற்கும். அது வளவுக்குள் திரிந்தால் எவரும் அருகே வரத் துணிவதில்லை. அதன் குரைப்போசை ஊரெல்லைவரை கேட்டது. *1983*இல் தம்பி புலம்பெயர சிக்கோ எனது தோழனானது.

*1984-85* காலப்பகுதியில் ஏறாவூர் பொலிஸ் நிலையத்தினை விடுதலைப் புலிகள் தாக்கிய இரவு சங்கிலியை அறுத்துகொண்டு ஓடிப்போனது. ஊரெல்லாம் தேடியும் சிக்கோவைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இரண்டு மூன்று மாதங்கள் செல்ல தொத்தலாய் மெலிந்து உருக்குலைந்து, சொறி சிரங்கோடு வந்து சேர்ந்தது.

சிக்கோவை நீராட்டிச் சீராட்டி, காயங்களுக்கு மருந்திட்டு சத்தான உணவு கொடுத்து ஓரிரு மாதத்திற்குள் மீண்டும் மீட்டெடுத்தோம். வீட்டின் வாசலோடுதான் அதன் வாசம். கண்டதும் மகிழ்ச்சியில் துள்ளும். வாசலில் உட்கார்ந்தால் அது மடியில் தலைவைத்துப் படுத்துக்கொள்ளும்.

ஊரைவிட்டு வெளிநாடு புறப்பட்ட அன்று மாலை அதற்கு இறைச்சி வாங்கிக் கொடுத்து தலையைக் தடவிக் கொடுத்துப் பேசிக்கொண்டிருந்தேன். விடைபெற்றபோது என் தலைமறையும்வரை பார்த்துக் கொண்டிருந்தது.

நான் புலம்பெயர்ந்த பின்னான ஒரு நாள் 'சிக்கோ பாம்பு கடித்து இறந்துபோனது' என்று அம்மா கடிதத்தில் எழுதியிருந்தார்.



சன்தியாகோ தீ கொம்பொஸ்டெலாக்கு (Santiago De Compostela) யாத்திரை சென்றிருந்த நாளொன்றில் மலைப்பாங்கான பிரதேசத்தில் நடந்து கொண்டிருந்தேன். உவப்பான காலநிலை வாய்த்திருக்க, எனக்கு வலது பக்கத்தில் நீல நிறத்தில் எல்லை யில்லாத வயல்போன்று அத்திலாந்திக்



*சமுத்திரம் பரந்து கிடந்தது. கடலலைகளும் ஓய்ந்துவிட்ட அமைதியான பொழுது.*

*காலின் முன்பகுதி விண் விண் என்று வலிக்க ஆரம்பித்தது. இன்னும் ஓரிரண்டு கி.மீ. நடந்தால் நான் குறைந்தது 4-5 நாட்களுக்கு ஓய்வு எடுக்கவேண்டிவரும் என்று அனுபவம் கற்றுத் தந்திருப்பதால், நடையை நிறுத்தி, கடந்துபோகும் வாகனங்களுக்கு என்னை அழைத்துப்போக முடியுமா என்று பெருவிரலை கீழே காண்பித்துச் சமிக்ஞை செய்தேன்.*

*குறுகிய நேரத்தினுள் ஒருவர் வாகனத்தை நிறுத்தி ஏற்றிக்கொண்டார். இருவருக்கும் மற்றையவரது மொழி புரியவில்லை. அது அத்தனை பாதகமாயும் இருக்கவில்லை.*

*இந்த யாத்திரை செல்பவர்களுக்கான தேவைகளை தங்களின் தேவைபோன்று உணர்ந்து உதவிச்செல்லும் மனிதர்களின் மனங்களை என்னவென்பது? யாத்திரை செல்பவர்களுக்கு உதவினால் அது கடவுளுக்கு உதவியது போன்று எண்ணுகிறார்கள் என்று நினைக்கிறேன். எள்ளென்றால் எண்ணெயாய் நின்ற பலரை இந்த மூன்று யாத்திரைகளிலும் கண்டிருக்கிறேன்.*

*மலைப் பகுதியில் உள்ள பண்ணையொன்றுக்குள் அமைந்திருந்தஒருமடத்தில்என்னைஇறக்கிவிட்டபின், அவர் மறைந்ததும் உள்ளே செல்வதற்காய் திரும்பியபோது திடுக்கிட்டேன்.*

*நான் ஐந்தடி ஏழு அங்குலம் உயரமானவன். எனது இடுப்பு உயரத்திற்கு என் முன்னே சிங்கம் போல் ஒரு நாய் நின்றிருந்தது. அத்தனை உயரமும் ரோமமும்.*

*அதை உற்றுப் பார்த்தேன். அதன் கண்களில் வசீகரமானதொரு அமைதி தெரிந்தது. அனுபவ முதிர்ச்சியில் மௌனத்தையும் கனிவையும் மொழியாகக் கொண்ட ஞானம் வாய்த்த மனிதர்களைப்போல வாலை ஆட்டியபடி, எதுவுஞ் செய்யாமல், சொல்லாமல் திரும்பி நிதானமாக நடந்தது. அதன் அருகாமை மனதுக்கு ஒரு அமைதியைத் தருவதை உணர்ந்தேன்.*

*அதன் பெயர் பீல் என்றும் அதற்கு வயது 5 என்றும் (மனிதர்களின் வயதுடன் ஒப்பிட்டால் 35) என்றும் பின்பு அறிந்துகொண்டேன்.*

*எனது வரவைப் பதித்துகொண்டபின் குளித்து, உடைகளைக் கழுவிக்கொண்டபோது, வெளியே குளிரும் மழையுமாய் இருந்தது. கால் வலி குறைந்தபாடில்லை.*

மடத்தின் உரிமையாளர் என் கட்டிலைக் காண்பித்தார். எனது முதுகுப் பையை இறக்கி, அதனுள் இருந்த பொருட்களை எடுத்து கட்டிலில் பரப்பிக் கொண்டிருந்தபோது, அங்கு வந்த பீல் எனது காலில் தலையை வைத்துப் படுத்துக்கொண்டது.

காலை உணவுக்காக வாங்கியிருந்த பதப்படுத்திய இறைச்சித் துண்டுகளைக் கொடுத்தேன். தலையைச் சாய்த்து நாக்கால் அவற்றை இழுத்தெடுத்துக்கொண்டு வாலையாட்டியது.

நான் தங்கியிருக்கும் மடத்திற்கு அருகே ஒரு கடைகளும் இல்லை. மடத்தில் உள்ளவர்களே உணவைத் தயாரிக்கிறார்கள். மீன் சூப், உருளைக் கிழங்குக் களி, பாண் (ரொட்டி) இரவு உணவாக கிடைத்தது. பழரசமும் தந்தார்கள்.

உணவின் பின், ஒரு பாதிரியார் வந்தார். அவர் நீண்டநேரம் உரையாற்றினார். அவரின் உரையை மூன்று மொழிகளில் மடத்தில் தங்கியிருப்பவர்கள் மொழிபெயர்க்க வேண்டியிருந்தது. நாம் நிலத்திலும் வாங்குகளிலும் உட்கார்ந்திருந்தோம்.

அந்த பாதிரியார் உரையாற்றுவதில் வல்லவராகவும் மனிதர்களின் மனங்களுடன் உரையாடக் கூடியவராகவும் இருந்தார். அவரது வெளுத்துவிட்ட முடியும் தாடியும் அவரது பழுத்த அனுபவத்தைக் கூறின.

“இந்த மடம் உள்ள இடம் ஏறத்தாழ நூறு வருடங்களுக்கு முன்பிருந்தே ஒரு பண்ணையாக இருந்தது. இந்தப் பண்ணையின் உரிமையாளர் இந்த இடத்தை யாத்திரிகர் மடமாக மாற்றுவதற்காகத் தந்திருந்தார்.

இப்பண்ணையாளர் இந்த இடத்தை தரும்போது இது யாத்திரிகர்களுக்கு இலவசமாக சேவை செய்யும் ஓர் இடமாக இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டதற்கிணங்க, இங்கு நாம் யாத்திரிகர்களிடம் பணம் வாங்குவதில்லை. யாத்திரிகர்கள் விரும்பினால் பண உதவி செய்யலாம் அல்லதுஎமது அன்றாட வேலைகளில் கலந்துகொண்டு எமக்கு உதவலாம்.

இந்த மடத்திற்கு வெளியேயான உலகம் பணத்தை அடிப்படையாகக் கொண்டே இயங்குகிறது. ஆனால், இந்த மடம் மனிதர்களின் ஒற்றுமையையும் ஒருவருக்குகொருவர் உதவும் மனப்பான்மையையும் சக மனிதன் மீதான அன்பு புரிந்துணர்வு, தோழமை ஆகியவற்றையும் அடிப்படையாகக்கொண்டு இயங்குகிறது” என்றார்.

வேறு பலருடன் நான் நிலத்தில் உட்கார்ந்திருந்து பாதிரியாரின் பேச்சினைக் கேட்டுக்கொண்டிருந்தேன். நாம் உட்கார்ந்திருந்த இடத்தில் இருபது முப்பது யாத்திரிகர்களும் ஏழெட்டுப் பணியாளர்களும் இருக்க, பீல் என்னைத் தேடிவந்து மடியில் தலைவைத்துப் படுத்துக்கொண்டது. அதன் தலையைத் தடவிக்கொடுத்தேன். மிகவும் பலவீனமான ஒரு முனகலை அவ்வப்போது வெளிப்படுத்தியபடி படுத்திருந்தது.

உரையாற்றிக் கொண்டிருந்த எர்னெஸ்டோ பாதிரியார் இந்த பண்ணையிலேயே பிறந்தவராம். ஸ்பெயின் நாட்டு உள்யுத்தக் காலத்தில் இக்கிராமத்தில் இருந்து இடம்பெயர்ந்து பார்சிலோனா நகரத்தில் 21 ஆண்டுகள் வாழ்ந்த பின், சாண்டாண்டர் பல்கலைக்கழகத்தில் மதபோதகருக்கான மேற்கல்வியினைக் கற்றிருக்கிறார். அதன்பின் மிகவும் பின்தங்கிய, ஒற்றையடிப் பாதைகளை மட்டுமே கொண்ட ட்ரெஸ்விசோ மலைக் கிராமத்தில் பாதிரியாராக வாழ்ந்திருந்த காலத்தில், அக்கிராமத்திற்கான பாதையை உருவாக்கிய நாட்களில் எடுத்த புகைப்படங்களைக் காண்பித்தார். பல வளைவுகளைக் கொண்ட ஆபத்தான பாதையாக அது இருந்தது.

“பல்கலைக்கழகத்தில் பெறப்படும் பட்டங்கள் எவையும் உலக வாழ்வினைப் போதிப்பதில்லை. நீ சிறந்த பாதிரியாராக வரவேண்டும் எனின், முதலில் உலகத்தைச் சுற்றிப்பார், மனிதர்களுடன் பழகி அவர்களைப் புரிந்துகொள், அவர்கள் உனக்கு எவராலும் கற்றுத் தரமுடியாத பலவற்றையும் கற்றுத்தருவார்கள்“ என்று தனது குரு கூறியதன் காரணமாக, 1969 தொடக்கம் இன்றுவரை 75 நாடுகளை சுற்றிப் பார்த்திருக்கிறாராம். 1976இல் வடக்கு நோர்வேயின் இறுதிவரை சென்று வந்திருந்ததையும் நினைவுகூர்ந்தார்.

1979ஆம் ஆண்டு ஒரு லேண்ட் ரோவர் வாகனத்தில் ஒரு நீண்ட பயணம் ஆரம்பித்து, மீண்டும் அவர் திரும்பிவந்தபோது 3 வருடங்களும் 500000 கி.மீ.களும் கடந்திருந்தனவாம். மக்களுடன் வாழ்ந்தும் பழகியும் பலதையும் கற்றுக்கொண்டதாகவும் கூறினார்.

பயணங்கள் மனிதர்களை விசாலிக்கும் என்று வாசித்திருக்கிறேன். நானும் ஒரு விதத்தில் அதே நோக்கத்துடன்தான் நடந்து கொண்டிருக்கிறேன். அதையே இன்னொரு மனிதர் அனுபவித்து ஆமோதிப்பதைக் கேட்கும் போது மகிழ்ச்சியாக இருந்தது. எனக்குள் இன்னும் இன்னும் பயணிக்க வேண்டும் என்ற உணர்வை பாதிரியார் விதைத்து விட்டிருந்தார்.

எனது மடியில் பீல் ஆழ்ந்து தூங்கியிருப்பது போலிருந்ததால் அதன் தலையைத் தடவுவதை நிறுத்தினேன். தலையைத் தூக்கிப் பார்த்து கையை நக்கியது. மீண்டும் தலையைத் தடவினேன். படுத்துக்கொண்டது.

யாத்திரையின் போது மடங்களில் ஒரு நாளுக்கு



அதிகமாக தங்க அனுமதிக்க மாட்டார்கள். என் கால்களில் வலிகண்டிருப்பதால், என்னால் நாளை நடக்க முடியாது. அப்படி நடந்தாலும் என்னால் அதிக தூரம் நடக்கமுடியாது என்பதனால், பாதிரியாரிடம் இரண்டு நாட்களுக்கு தங்கியிருக்க அனுமதி கேட்டேன்.

நீ எந்த நாட்டவன் என்று ஆரம்பித்து,"கன்னியா-குமரி வரை சென்றிருக்கிறேன். ஆனால், உனது நாட்டுக்கு வரமுடியவில்லை" என்றும் 'இந்த மடத்திற்கு வந்த முதலாவது சிலோன்காரன் நீ' என்றும் சொன்னார். சற்றுப் பெருமையாக இருந்ததுடன், அவர் ஸ்ரீலங்கா என்று குறிப்பிடாதது மனதுக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது. அந்த இரண்டு சொற்களுக்கு இடையேயும் பெருத்த அரசியலும் உணர்வுகளும் உண்டு.

சிறிது நேரம் உரையாடிக் கொண்டிருந்த பின், தனது உதவியாளரிடம் கால் குணமாகும்வரை என்னை அங்கு தங்கவைத்து உபசரிக்கக் கட்டளை யிட்டார்.

மறுநாள் பாதிரியாரின் உதவியாளரிடம் சென்று, "எனக்கு ஏதாவது வேலை கொடுங்கள்" என்றேன். "யாத்திரிகர்கள் உறங்கும் ஓய்வெடுக்கும் பகுதி, சமையலறை, கழிப்பறை ஆகிய இடங்களைச் சுத்தப்படுத்த முடியுமா" என்றார். இரண்டு மணிநேரம் கடந்துபோனது.

நான் வேலை செய்துகொண்டிருந்தபோது பீல் தனது கண்ணிலிருந்து என்னை விலக்கவில்லை. என்னைச் சுற்றியபடியே இருந்த அதில் எனக்கும் ஒரு பிடிப்பேற்பட்டிருந்தது. "பீல் வா..." என்றால் வந்தது. "இரு" என்றால் இருந்தது. நாம் இருவரும் அருகருகே இருந்து காலையுணவு அருந்தினோம். வெளியே நடந்துபோனோம்.

மேலும் ஒரு நாள் அங்கு தங்கினேன்.

மதியம்போல், நான் ட்ராக்டர் வண்டியின் பெட்டியில் சாய்ந்திருக்க, பாதிரியார் அதனைச் செலுத்தியபடி பண்ணையையும் அதன் சுற்றாடலையும் சுற்றிக் காண்பித்தார்.

நாம் புறப்பட்ட போது பீல் ட்ராக்டர் வண்டியின் முன்னால் நின்று பாதிரியாரைப் பார்த்தது.

"என்ன, உனக்கும் வரவேண்டுமா? பொறு... உன்னால் நடக்க முடியாது" என்று பீலுடன் பேசியபடியே அதனை நான் இருந்த பெட்டிக்குள் சிரமப்பட்டு ஏற்றிவிட்டார். அது அவரது முகத்தை

நக்கியது. அவரும் முத்தம் கொடுத்தார்.

பெரிய பண்ணை. மலைப் பகுதியின் சரிவுகளைப் படிக்கட்டு முறைமூலம் விதை நிலங்களாக்கியிருந்தனர். வழிந்தோடும் அருவியில் இருந்து பயிர்களுக்கு நீர் கிடைத்தது. மிருகங்களின் கழிவுகள் பசளையாகின. காற்றாடி ஒன்றின் ஊடாக சிறிய மின்சார பிறப்பாக்கி இயங்கிக் கொண்டிருந்தது.

பெர்ரி மரங்களுக்கருகில் வாகனத்தை நிறுத்தி, அன்றைய இரவின் இனிப்பு உணவுக்கு தேவையான அளவு பெர்ரி பழங்களைப் பறித்து உண்டபடி பேசிக்கொண்டிருந்தோம்.

பின்மாலைப் பொழுது. வெளியே எட்டுப் பாகை குளிர். கடும் காற்று வீசியது. கறுத்த மழைமேகங்கள் சூழ்ந்திருந்தன.

கம்பளியிலான மேலாடை அணிந்துகொண்டு சூடுகாயும் இடத்திற்கு முன்னே ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தபடியே நெருப்பெரித்து குளிர் காய்ந்து கொண்டிருக்கும்போது பீல் வந்து என்னருகில் படுத்துக்கொண்டது.

அப்போது மூவர் உள்ளே நுழைந்தனர். அவர்களில் ஒருவரின் உடல்வாகு, நடையுடை பாவனைகள், மொழி போன்றவை அவர் ஒரு மாற்றுத்திறனாளி என்பதை அறிவித்தன.

எரிந்த நெருப்பின் கணகணப்பு பீலுக்கு இதமானதாகஇருந்திருக்கவேண்டும். அதன் முதுகைத் தடவிக் கொடுத்தபோது தலையை நிலத்தில் வைத்து கண்ணை மூடிக்கொண்டது.

இரவு உணவின்பின் அனைவரும் உட்கார்ந்திருந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் மூவரும் சகோதரர்கள் என்பதை அறிந்தேன். தங்களின் மாற்றுத் திறனாளி சகோதரனும் உலகை, யாத்திரையை, இயற்கையை, வேறு பல மனிதர்களைச் சந்திக்கவேண்டும் என்பதற்காக அவரை 750 கி.மீ. நீளமான யாத்திரைக்கு இரண்டு சகோதரர்களும் அழைத்து வந்திருக்கிறார்கள்.

மாற்றுத்திறனாளியான சகோதரன் ஒரு மணிநேரத்திற்கு 2 கி.மீ. நடந்தாலே அதுவே பெருங்காரியம் என்ற நிலையில், அவர்களது நடையின் வேகம் இருந்திருக்கிறது. அவருக்கு தேவையான உணவு, உடை, மருந்துகள் அனைத்தையும் சகோதரர்களே சுமக்கிறார்கள். கூடாரமடித்து தங்கிய நாட்களும் இருந்திருக்கின்றன. மாற்றுத்திறனாளி சகோதரனை அவரது வேகத்தில் நடக்க அனுமதித்து, அவரின் உலகினுள் இவர்கள் வாழ்ந்து யாத்திரையை இதுவரை இரண்டரை மாதங்கள் நடந்து கடந்திருக்கிறார்கள். இன்னும் சில மாதங்கள் எடுக்கும் அவர்கள் யாத்திரையை முடிப்பதற்கு.

இவ்வாறு அவர்கள் கூறிய போது, என்னால் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மிகவும் நெகிழ்ந்துபோனேன். தொண்டை அடைத்தது, பேச முடியவில்லை, கண்கள் கலங்கின.

எத்தனை அற்புதமான மனங்களை அவர்கள் கொண்டிருக்கவேண்டும்? இன்னொரு மனிதருக்காக, அவரது விசித்திரமான உலகில், தங்களின் விருப்பு வெறுப்புகளை ஒதுக்கி, இரண்டரை மாதங்களுக்கு அதிகமாக வாழ்கிறார்கள். இன்னும் இரண்டு மாதங்களுக்கு அவர்கள் நடக்கவேண்டியுமிருக்கிறது.

இப்படி எத்தனை மனிதர்களால் இன்னொரு மனிதனின் மகிழ்ச்சியில் மனம் நிறைந்து வாழ்ந்துவிட முடிகிறது?

இந்தளவுக்கு என்னால் நிச்சயமாக முடியாது. அவர்களிடம் இருந்து கற்றுக்கொள்ள எவ்வளவோ இருக்கிறது என்றது மனது.

“நீங்கள் இருவரும் உங்கள் சகோதரனை அரவணைத்துக்கொள்ளும் முறை என்னை நெகிழ வைத்திருக்கிறது. உங்கள் சகோதரன் மிகுந்த பாக்கியசாலி” என்றேன்.

அவர்கள் முறுவலித்தார்கள்.

இந்த யாத்திரைகளின்போது மனதை அசைத்த சில மனிதர்களைச் சந்திக்கக்கிடைத்திருக்கிறது. 2012ஆம் வருட யாத்திரையின்போது 75 வயதுள்ள முற்றிலும் கண் பார்வையற்ற கணவனை 750 கி.மீ. அழைத்துச் சென்ற துணைவி ஒருவரைக் கண்டிருந்தேன்.

அவர்கள் இருவருக்கும் ஒரு நீண்ட தடியே தொடர்பை உருவாக்கிக் கொடுத்தது. அத் தடியின் நுனியை பெண் பிடித்திருப்பார். அடியை ஆண் பிடித்திருப்பார். பெண் நடந்தால் அவர் நடந்தார். நின்றால் இவரும் நின்றார்.

வயதாகிவிட்ட அப்பெண்ணினால் தனது உடமைகளை சுமக்க முடியவில்லை. தேகாரோக்கியம் கொண்ட அவர் இருவரினதும் உடமைகளைக் காவினார்.

இப்படியான காட்சிகளைக் காண நேரும் பொழுதுகளில் தனித்து வாழ்வது கனதியாக மாறிவிடுவதோடு, தனிமையுணர்வு என்னைச் சூழ்ந்துவிடும். ‘தனிமை வாழ்வை பயமுறுத்தும் நேரமும்’ அதுவே.

தனது எண்பதுகளை நெருங்கிக் கொண்டிருந்த இன்னொரு பெண், தனித்து நடந்தார். தனது பொருட்களைத் தானே காவினார். வாழ்வின் மீதான எந்த அவசரமும் அவரிடம் இருக்கவில்லை.



அவருடன் உரையாடியபோது, "நாம் தனித்தே இந்த உலகில் இறக்கிவிடப்படுகிறோம். தனித்தே புறப்படுகிறோம். இதைத் தவிர்த்து அனைத்தும் மாயையல்லவா" என்றார். அவரது வாசகங்களை இன்றும் நினைத்துப் பார்ப்பதுண்டு. அதன் அர்த்தம் ஒவ்வொரு முறையும் விழுதுவிடும் ஆலமரம் போன்று விசாலித்துச் செல்வதாய் உணர்வேன்.

அன்று ரியல் மட்ரீட் கழகத்திற்கும் அட்லடீகோ மட்ரீட் கழகத்திற்கும் இடையே ஐரோப்பிய கிண்ண கழகங்களுக்கிடையிலான இறுதிப்போட்டி நடைபெற்றுக்கொண்டிருந்தது. நாம் அதை ரசித்தபடி பேசிக்கொண்டிருந்த போது, எர்னெஸ்டோ பாதிரியார் எதிர்பாராதவிதமாக அங்கு வந்து, "எனது நாட்டின் இந்த இரண்டு அணிகளும் எனக்கு பிடித்தமானவை. ஒரு பெரும் நகரத்தின் இரண்டு அணிகள் இப்படியான பிரபல கிண்ணத்தின் இறுதியாட்டத்தில் விளையாடுவது சரித்திரத்தில் இதுவே முதற்தடவை. இதில் யார் வென்றாலும் வெற்றி என்னுடையது. யார் தோற்றாலும் தோல்வியும் என்னுடையது" என்றபடி எம்மருகிலிருந்து ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டார்.

அவரையும் அந்தச் சகோதரர்களின் செய்கை நெகிழச் செய்திருக்க வேண்டும். எழுந்து சென்று அவர்களை அணைத்துக்கொண்டார். நாம் உட்கார்ந்திருந்த அறையின் நான்கு சுவர்களுக்கும் அன்பு அன்பின் வாசனையை உணர்ந்தேன்.

தனது வாழ்க்கையின் அந்திமக் காலத்தில், தான் இருப்பதாகவும் தனக்குப் பின் இந்த மடம் தற்போதுள்ள நெறிமுறைகள், விழுமியங்களுடன் தொடர்ச்சியாக இயங்க வேண்டும் என்று விரும்புவதாகவும் அதற்காக தற்போது இந்த மடத்தில் உள்ளவர்களைத் தயார்படுத்தி வருவதாகவும் கூறினார்.

பாதிரியாரின் குரலைக் கேட்ட 'பீல்' முனகலுடன் எழுந்துசென்று பாதிரியாரின் காலடியில் சுருண்டது. அவர் அதன் முதுகை வாஞ்சையுடன் தடவிக்கொடுத்தபடி ஏதோ சொன்னார். 'பீலு'க்கு அவரின் மொழி புரிந்திருக்க வேண்டும். அவரின் பாதத்தில் தலையை வைத்து உறங்கிப்போனது அது.

"பீல் இன்னும் சிறிது காலமே உயிர்வாழும். அது இன்றாகவும் இருக்கலாம் நாளையாகவும் இருக்கலாம். அதன் பாரிய உடம்பை அதனால் தூக்கித் திரிய முடியாதளவுக்கு அது நோய்வாய்ப்பட்டிருக்கிறது. வலி அதிகரிக்கும்போது அது தொடர்ந்து முனகும் அல்லது பலவீனமாக ஓலமிட்டபடியே இருக்கும்" என்றார்.

என்னைப் பார்த்து, "நாளை புறப்படுகிறாயா?" என்றவருக்கு "ஆம்" என்றபோது "புவன் கமீனோ" (யாத்திரை சிறக்கட்டும்) என்று வாழ்த்தி, எழுந்து வந்து அணைத்துக்கொண்டார்.

அன்றிரவு 'பீல்' நெடுநேரம் பெருங்குரலெடுத்து ஓலமிட்டுக் கொண்டிருந்தது. ஓரிரு முறை எனது கட்டிலுக்கு அருகில் படுத்திருந்தது. தலையைத் தடவி விட்டேன். கையை நக்கியது. பின்பு பாதிரியார் வந்து அதை அழைத்துப்போனார். நான் உறங்கிப்போனேன்.

இரவு 01.00 மணிபோல் சிறுநீர் கழிக்க எழுந்தபோதும் 'பீல்'லின் ஓலம் மனதைப் பிசைந்தது. நிம்மதியாகத் தூங்க முடியவில்லை.

மறுநாள் அதிகாலை எழும்பியபோது 'பீலி'ன் சத்தம் கேட்கவில்லை. நான் அங்கிருந்து புறப்படும்வரை பீலைக் காணவுமில்லை.

நான் மடத்தை விட்டுப் புறப்பட்டபோது, யாரோ என்பின்னால் வருவது போன்று உணர்ந்து திரும்பிப் பார்த்தேன்.

எவருமில்லை. ●

சஞ்சயன் <adsayaa@gmail.com>

# நோயல் கோவார்ட் மாஸ்டர்!

## ஸிந்துஜா

நடிப்பை விட எழுத்துதான் முக்கியம்: அது காலங் கடந்து நிற்கும். நடிப்பு பார்வையாளர்கள் மனதில் நிற்கும் - அவர்கள் உயிரோடு இருக்கும் வரை. எழுத்து என்பது படைத்தல்; நடிப்பு என்பது விளக்கம் அளிப்பது.

அவர் ஒரு தலைமுறையின் கண்ணாடி என்று வருணிக்கப்பட்டார். அவ்வாறுதான் நோயல் கோவார்ட்டின் நாடகங்கள் சென்ற நூற்றாண்டில் அரங்கேறிய போது அவற்றில் பார்வையாளர்கள் மனித மன விசித்திரங்களையும், அரசியலும் பொருளாதாரமும் மக்களின் வாழ்க்கையைத் தீர்மானிப்பது பற்றியும் அன்றைய தின கலாச்சார சுதந்திரம் / அடக்குமுறை பற்றியும் விரிவாக அறிந்தார்கள். பாலுணர்வு விஷயங்களில் மிகக் கடுமையான பார்வையை அரசு இயந்திரம் தனது சட்ட திட்டங்களில் பொருத்தியிருந்த சூழலில் நோயல் எதிர்ப்புக் குரல் எழுப்பினார்.

ஓரினச் சேர்க்கைக்காக ஆஸ்கர் ஒயில்டுக்கு சிறைத் தண்டனை அளிக்கப்பட்ட வரலாறு இங்கிலாந்தில்தான் நடந்தது. இதன் பின்புலத்தில் நோயல் ஒருபால் உறவை மையமாக வைத்து எழுதிய இரு நாடகங்கள் வெளியுலகைக் காணாமலிருந்தன. அவற்றுள் ஒன்றில் மூன்று ஆண்கள் கொள்ளும் உறவைப் பற்றி எழுதினார். மற்றொரு நாடகம் ஓரினச் சேர்க்கையாளர்களை அருவறுத்து வெளியான எதிர்க் குரல்களை எதிர்த்து எழுந்தது. இந்நாடகங்கள் பற்றிய குறிப்பு 1960இல் எழுதப்பட்ட கடிதமொன்றிலிருந்து வெளியுலகின் கவனத்துக்கு வந்தது, முப்பது வருடங்கள் நோயலிடம் செயலராகப் பணியாற்றிய லார்ன் லோரெய்ன் என்னும் பெண்மணி எழுதிய கடிதத்தில் இந்த மூன்று ஓரினச் சேர்க்கையாளர்களைப் பற்றிய நாடகத்தைக் குறிப்பிடுகிறார். அம் மூவரில் ஓவன், ட்ரெவர் ஆகிய இருவரும் மணமாகாதவர்கள். ஜான் மணமானவன். தனது கடிதத்தில் லோரெய்ன் இவ்வாறு எழுதுகிறார்:



*அன்புள்ள மாஸ்டர் (நோயலை எல்லோரும் மாஸ்டர் என்றுதான் அன்று அழைத்தார்கள். நாடக இயக்கத்தில் பல்கலை மன்னனாக அவர் விளங்கியதால்) இந்நாடகத்தின் உருவம் பற்றி நான் வெகுவாகச் சிந்தித்தேன்: இந்த நாடகம் உளவியல் ரீதியாகவும் உணர்ச்சிகளுக்கு இடம் கொடாமலும் கட்டுப்பாடுடன் படைக்கப்பட வேண்டும். அதில் கொஞ்சமும் மெலடி கலந்திருக்கக் கூடாது. ஜான் மீது அதீத காதல் கொண்ட ஓவன் - ஆனால், ஜான் அந்தக் காதலை ஏற்கவில்லை - ட்ரெவரிடம் தொடர்புகொள்வது ஓர் நிராகரிக்கப்பட்ட காதலனின் மனப்பான்மையினால் விளைந்தது என்று நீங்கள் எழுதுவது சரியான கருத்தா என்று எனக்குள் கேள்வி எழுகிறது.*

இங்கிலாந்தில் 1967இல் ஓரினச் சேர்க்கை மீது இருந்த தடை நீக்கப்பட்ட போது நாடகங்களில் இருபத்தியோரு வயதுக்கு மேற்பட்டவர்கள் மட்டுமே இம்மாதிரிக் காட்சிகளில் நடிக்க அனுமதிக்கப்பட்டனர். அச்சமயம் தனது சொந்த வாழ்வில் ஓரினச் சேர்க்கையாளராக இருந்த நோயல் தமது நாடகங்களில் அம்மாதிரிக் காட்சிகளைக் கொண்டு வருவதில் கவனம் செலுத்தினார். அவரது பெரும்பான்மையான நாடகங்களில் இந்த விவகாரம் மறைமுகமாகவே சொல்லப்பட்டது.

1924இல் நோயல் எழுதிய ‘நீர்ச்சுழல்’ நாடகம். அவருக்குப் பெரும் புகழைக் கொண்டு வந்தது. போதை மருந்துக்கு அடிமையான மகனையும் அவனது



நோயல் கோவர்ட், ஜெனீவா, சுவிட்சர்லாந்த், 1955

ஒழுங்கீனமான தாயையும் பற்றிய நாடகம் அன்றைய இளைஞர்களை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. கட்டுப்பாடுகளின் இறுக்கமான சூழலில் வளர்ந்து வந்த ஓர் இளைஞர் சமுதாயம், அதுவரை பொது வெளியில் சொல்லப்படாத பாலுறவுப் பிரச்சினைகளை முன்வைத்து எழுப்பப்பட்ட கேள்விகள் மிகுந்த சர்ச்சைகளைக் கிளப்பியதைக் கண்டு அதை வரவேற்றது. தொடர்ந்து அவர் எழுதிய மற்றொரு நாடகமான 'வயது வாடிச் சுருங்குவதில்லை' ஓரினச் சேர்க்கையில் ஈடுபாடு கொள்ளும் திருமணமான ஓர் இளைஞனைப் பற்றியது.

ஜாஸ்பர் என்பவன் தன் மனைவியைவிட்டுவிட்டுத், தான் விரும்பும் இன்னொரு ஆணுடன் போய் விடுகிறான். இது அவனது தாய் மெலிஸ்ஸாவுக்குப் பெரும் மன உளைச்சலைத் தருகிறது. அவனது பாட்டி நவாமி அறுபது வயதுக்கு மேற்பட்டவள். அவன் தன் மருமகள் படும் கஷ்டத்தைப் பார்த்துவிட்டு, "நீ இன்னும் சற்றுக் கண்ணியமாக நடந்துகொள்ளப் பார். உன் கொந்தளிக்கும் மனத்தைத் தனியாக இருந்து ஆற்றுப்படுத்திக் கொள். நீ உண்மையாகவே துயருற்றுத் தடுமாறி நிற்கிறாய் என்றால் அதற்காக நான் உன் மீது பரிதாபம் கொள்ளவோ, உன்னைத் தேற்றவோ முயலப் போவதில்லை. ஜாஸ்பர் விஷயத்தில் நம் வேலையைப் பார்த்துக் கொண்டு போவதைத் தவிர எனக்கோ உனக்கோ வேறு வழியில்லை. நீ என்னை விட மிகுந்த அதிர்ச்சி அடைந்திருக்கிறாய் என்று எனக்குத் தெரிகிறது. இதற்குத் தலைமுறை இடைவெளி காரணமாக இருக்கலாம். எனக்கென்னவோ மிகவும் வயதான அல்லது மிகவும் வயது குறைந்தவர்களே இன்றைய விசித்திரமான கால வெள்ளத்தில் சமூக ஒழுக்க மதிப்புகளைச் சரியாகப் புரிந்துகொள்கிறார்கள் என்று தோன்றுகிறது" என்று சொல்கிறாள்.

தலைமுறை இடைவெளியை இத்தகைய வித்தியாசமான கண்ணோட்டத்தில் நோயல் தன் நாடகத்தில் அறிவித்தது பார்வையாளர்களை வெகுவாகக் கவர்ந்தது. வெகுஜன அபிப்பிராயத்துக்கு நேர் எதிர்த் திசையில் சென்ற இப்பார்வை நோயலை வித்தியாசமான சிந்தனையாளராகவும் உண்மையை மறைக்காமல் சொல்லுபவராகவும் வெளியுலகத்துக்கு அறிமுகப்படுத்தியது. இவ்வளவுக்கும் நோயல், 'மரபுகளும் சம்பிரதாயங்களும் நூற்றாண்டுகளாக நாடகங்களை உயிர் வாழ வைத்துள்ளன. அவற்றை ஒருவர் மதிக்கவில்லை என்றால் அது வருத்தத்துக்குரிய விஷயம்' என்று தன் அபிப்பிராயத்தைப் பொதுவெளியில் வைத்திருந்தார். ஆனால், அதே சமயம் கால ஓட்டத்தில் மாறும் மனித மன மதிப்புகள், சமூக மாற்றங்கள் ஆகியவற்றை ஏற்றுக்கொள்ளாமல் ஒருவர் வளைய வந்தால், அவருக்கும் நட்டு வைக்கப்பட்ட கல்லுக்கும் வித்தியாசமில்லாமல் போய்விடும் என்று அவர் உணர்ந்து பணியாற்றினார்.

அடிப்படையில் நாடகமென்பது மகிழ்ச்சியையும் கேளிக்கையையும் பார்வையாளரிடம் பகிர வேண்டும் என்ற கருத்தை நோயல் கொண்டிருந்தார்.

அவரது வாழ்நாள் முழுவதும் அவர் இக்கருத்திலிருந்து விலகியிருக்கவில்லை. நாடகப் பயிற்சிப் பட்டறைகள் உண்மையான திறமைகளை வெளிக்கொண்டு வரப் பிரயாசைப்படுகின்றன. இது வரவேற்கத்தக்கது. ஆனால், எல்லாவற்றுக்கும் மேல் முக்கியமானது நாடகம் எப்போதும் பார்வையாளர்களின் கவனத்தில் இருந்தாக வேண்டும் என்பது அவரது குறிக்கோளாக இருந்தது.

ஹெரால்ட் பின்டர், ஜான் ஆஸ்போர்ன் போன்ற நாடக மேதைகளிடம் மிகுந்த மதிப்பு வைத்திருந்தார். பின்டரின் 'ஹோம் கமிங்' படித்த பின் நோயல் அவருக்கு எழுதிய கடிதத்தில், 'நான் வளர்ந்த நாடகச் சூழலில் கூறப்பட்ட அடிப்படை விதிகள் ஒவ்வொன்றையும் நீங்கள் மிக்க மகிழ்ச்சியுடன் உடைத்தெறிந்திருக்கிறீர்கள் - ஒரு நொடி கூட போரடிக்காமல் நாடகம் விளங்க வேண்டும் என்கிற முக்கியமான விதியைத் தவிர!' என்றார்.

'கோபக்கார இளைஞன்' என்னும் பட்டத்தை சரித்திரத்தில் முதன் முதலில் தாங்கிய ஜான் ஆஸ்போர்னுக்கு, அவருடைய 'சினத்துடன் திரும்பிப் பார்க்கையில்' என்னும் நாடகத்தைப் பற்றி எழுதும் போது, அதில் கிடைத்த ஆன்ம திருப்தியும் செறிவான மொழியும் தன்னைத் திகைக்க வைத்தது என்று நோயல் குறிப்பிட்டார். இதற்குப் பல வருடங்கள் கழித்து நோயலைப் பற்றிப் பேசுகையில் ஆஸ்போர்ன், 'நோயல் என்பவர் இந்த நூற்றாண்டுக்குக் கிடைத்த கொடை. இதை உணர முடியாத ஒருவர் நாடக உலகிலிருந்து விலகி நிற்பவராகத்தான் இருக்க முடியும்' என்றார்.

இளம் வயது நோயலைப் பலர் ஆரம்பத்தில், 'இவன் சிறுவனென்றாலும் புத்திசாலி. தான் புத்திசாலி என்று தெரிந்தவனாகவும் இருக்கிறான்' என்ற போது நோயல், 'அது எப்படி, நான் புத்திசாலியானவன் என்றிருக்கும் போது அதை அறியாமல் இருப்பேன்?' என்று துடுக்காகக் கேட்டான். அவன் பதிலில் தென்பட்ட தன்னம்பிக்கை, அகந்தை ஆகிய இரண்டுடன் கூடிய அவனது அபிலாஷையும் அப்ப திலில் தென்பட்டதாகக் கேட்டவர்கள் கூறினார்கள். அந்தத் தன்னம்பிக்கையின் வெளிப்பாடுதான் அவரை உலக அளவில் மதிக்கத்தக்க மிகச்சிறந்த நாடகாசிரியர் என்னும் பட்டத்தை வாங்கிக் கொடுத்தது.

1899ஆம் ஆண்டு நடுத்தர வர்க்கத்தில் பிறந்தாலும் அவரது குடும்பம் பழம் பெருமையில் ராஜ வாழ்க்கை, அரண்மனை, அலங்காரம் மிகுந்த நடையுடை பாவனைகள் பற்றியெல்லாம் பேசிக் கொண்டிருந்தது. ஆனால், தனது குடும்பத்தின் பழைய பெருமைகளை எல்லாம் தூக்கி அடிக்கும் வண்ணம் நோயல் தனக்கான பெரும் அந்தஸ்தைப் பின்னால் பெற்றுவிட்டார். அவர் இறக்கும் போது அவர் செல்வத்தின் மதிப்பு இன்றைய இந்திய ரூபாய் மதிப்பில் 55 கோடி!

எழுத்திலும் பேச்சிலும் நோயலிடம் ஒரு 'வார்த்தைச் சுரங்கமே' இருந்தது. நோயலைப் போல நாடகத்துறையின் வீச்சை முழுதும் உணர்ந்த இன்னொரு நாடக ஆசிரியரை ஆங்கில நாடக உலகம் கொண்டிருக்கவில்லை என்னும் பெருமை அவரை வந்தடைந்தது. நோயலின் எழுபதாவது பிறந்த நாள் கொண்டாட்டத்தின் போது அவரைப்பற்றிப் பேசுகையில் மவுண்ட்பேட்டன் பிரபு, 'நோயலை விடச் சிறந்த நாவலாசிரியர்கள், நோயலை விடச் சிறந்த நாடக ஆசிரியர்கள், நோயலை விடச் சிறந்த இசையமைப்பாளர்கள், நோயலை விடச் சிறந்த பாடகர்கள், நோயலை விடச் சிறந்த நாட்டியக்காரர்கள், நோயலை விடச் சிறந்த இலக்கியவாதிகள், நோயலை விடச் சிறந்த நகைச்சுவை விற்பன்னர்கள், நோயலை விடச் சிறந்த தொலைகாட்சி நட்சத்திரங்கள், நோயலை விடச் சிறந்த திரைப்பட இயக்குனர்கள், நோயலை விடச் சிறந்த சோக நடிகர்கள், நோயலை விடச் சிறந்த காபரே கலைஞர்கள், நோயலை விடச் சிறந்த ஓவியர்கள், நோயலை விடச் சிறந்த காமெடியன்கள், நோயலை விடச் சிறந்த நாடகத் தயாரிப்பாளர்கள் என்று இருக்கக் கூடும். ஆனால், இந்தப் பதினான்கு பேரையும் ஒருவரிடத்தில் பார்க்க விரும்பினால் இதோ இங்கிருக்கிறார் மாஸ்டர்!" என்றார்.

நோயலும் அவரது சமகாலத்தவரும் வாழ்ந்த நூற்றாண்டில் அவர்கள் பால்யம் எதிர்கொண்டது அச்சமுறுத்தும் போர்ச் சூழலை. தழும்புகள் நிறைந்த அத்தகைய உலகத்தைத் தனது படைப்புகளில் அபாரமாகக் கையாண்டார். அவரது 'படை அணிவகுப்பு' நாடகம் ஒரு வசதி மிக்க வீட்டின் சொந்தக்காரர்களுக்கும் அவர்களது வேலைக்காரர்களுக்கும் முப்பது வருஷப் போர்க் காலம் அளித்த மனஉளைச்சலை, போர்களால் நிகழ்ந்த வேதனைகளை உக்கிரமாக வெளிப்படுத்தியது. மாடிகளும் கீழ் வீடுமான பெரிய அரங்கத்தை நிர்ணயித்து இந்த நாடகம் நடத்தப்பட வேண்டும் என்பது நோயலின் குறிக்கோளாக இருந்தது. சுமார் நானூறு பேர் இந்த நாடகத் தயாரிப்பில் ஈடுபட்டார்கள். இந்த நாடகத்தில் இரண்டு ஹைடிராலிக் இயந்திரங்கள் காட்சிகளின் மாற்றத்தைப் பிரும்மாண்டமான முறையில் எடுத்துக் காட்ட உபயோகப்படுத்தப்பட்டன.

உண்மையில் 'படை அணிவகுப்பு' நாடகத்தில் நோயல் சுட்டிக் காட்டியது முப்பது ஆண்டுக் கால போர் வாழ்க்கையில் ஆரம்ப காலத்தில் மக்களின் மனதில் இடம் பிடித்திருந்த தேசப்பற்று, பின்வந்த காலத்தில் அவர்கள் எதிர்கொண்ட ராணுவ அராஜகங்களால் அரசுக்கு எதிரான மனநிலைகளை பெற்றுவிட்டது என்பதைத்தான்.



கெர்ட்ரூட் லாரன்ஸ் மற்றும் நோயல் கோவார்ட் , 1931

ஆனால், ‘படை அணிவகுப்பு’ நாடகத்தில் ஆங்கிலேயர்களின் நாட்டுப்பற்று ஒவ்வொரு காட்சியிலும் வசனத்திலும் வெளிப்பட்டது என்னும் பொருள்பட பொது வெளியில் பேச்சு பரவியது. இதன் காரணமாக அன்றைய கன்சர்வேட்டிவ் கட்சி இந்த நாடகத்துக்கு ஆதரவைத் தெரிவிப்பதன் மூலம் அப்போது நடக்கவிருந்த பொதுத் தேர்தலில் பெரும்பாலான மக்களின் ஆதரவு தனக்கு கிடைக்கும் என்று கணக்குப் போட்டது. ஆனால்,இதை மறுத்துப் பேசிய நோயல் பொதுத் தேர்தல் நடப்பதற்கு ஒரு வருடம் முன்பே 1930இல் நாடக ஏற்பாடுகள் தொடங்கி விட்டன என்றார். தேர்தலில் பலத்த ஆதரவு பெற்று கன்சர்வேட்டிவ் கட்சி ஆட்சி அமைத்தது. ஜார்ஜ் அரசரும் ராணி மேரியும் தேர்தல் நடந்த அன்று இரவு இந்நாடகத்தைக் காண வருகை புரிந்தார்கள். அக்டோபர் 1931 முதல் செப்டம்பர் 1932 வரை நடந்த ஒரு வருஷத்தில் இந்நாடகம் 405 தடவை மேடையேறி சாதனை புரிந்தது.

நீண்ட நாடகங்களுக்குப் பதிலாக சிறிய ஓரங்க நாடகங்களை எழுத நோயல் விரும்பினார். ‘இன்றிரவு எட்டரை மணி’ என்னும் நாடகம் பத்து ஓரங்க நாடகங்களை உள்ளடுக்கிக் கொண்டு வந்தது. இது வெவ்வேறு காலகட்டங்களில் ஐந்து அல்லது ஏழு அல்லது எட்டு நாடகங்களை அடுக்கிக் கொண்டு வந்தது. நோயல் இன்னும் ஒருபடி மேலே போய் ஒரு முறை பகல் இரண்டரைக்கு நாடகத்தை நடத்தினார். அன்று அந்த நாடகத்தின் பெயர்: ‘இன்று பகல் இரண்டரை மணி’! நீண்ட நேரம் எழுதுவதையும் நீண்ட நேரம் நடிப்பதையும் குறைத்துக்கொள்ள விரும்பி எழுதப்பட்ட இத்தகைய நாடகம் லண்டனில் (157 முறை) நியூயார்க்கில் (115 முறை) அரங்கேறி பலத்த வரவேற்பைப் பெற்றது. அமெரிக்காவின் புகழ் பெற்ற கார்டூனிஸ்டும் நகைச்சுவை எழுத்தாளரும் பத்திரிகையாளரும் நாடக ஆசிரியருமான ஜேம்ஸ் தர்பர் இந்நாடகத்தைக் கீழ்க்கண்டவாறு வரவேற்றார்:

> *இந்த சிறுநாடகங்கள் மிகுந்த புத்திசாலித்தனத்தை உள்ளடக்கியுள்ள. (நோயலைப் போல!). அவை தமக்கென்று தீர்மானிக்கப்பட்ட முடிவை நோக்கி நடந்து சென்றன. இந்த நகர மக்களைப் போல ஒழுக்கமும் அடக்கமும் நிரம்பிய நாடகங்கள். நான் எழுந்து நின்று கூத்தாடி என் மகிழ்ச்சியைத் தெரிவிக்கவில்லை. ஆனால், நான் மிகவும் ரசித்தேன். மிக மகிழ்ச்சியான பொழுதை அளித்ததற்கு நோயலுக்கு என் நன்றி.*

நோயலின் நாடக வசனங்கள் செக்ஸை உள்ளடக்கியிருந்ததால், அவை தணிக்கை முறைக்கு முன் பலதடவை வந்து நிற்க வேண்டியதா யிற்று. தவிர அவரது பாத்திரங்கள் பணக்காரர்களாக, சீரழிந்தவர்களாக, கிறுக்கர்களாக, தளுக்கர்களாக, சுயலாபம் தேடுபவர்களாக நடமாடினார்கள் என்ற அபிப்பிராயம் பொதுவெளியில் பரவியிருந்தது. ஆனால், அவரது நாடகங்களில் வெளிப்பட்ட கூர்மையான நகைச்சுவை வசனங்கள் இத்தகைய கண்ணோட்டங்களின் வீரியத்தைப் பெரும்பாலும் குறைத்து விட்டன. அவருடைய பார்வையாளர்களை மேம்படுத்தும் எண்ணம் அவருக்கு உண்டா என்று கேட்ட போது நோயல், “ஆம், திருத்தப்பட வேண்டும் என்னும் எண்ணம் லேசாக எழும் போது, அதை



‘நாங்கள் நடனமாடினோம்’ நாடகத்தில் நோயல் கோவர்ட், கெர்ட்ரூட் லாரன்ஸ்

மேலே வர விடாமல் அமுக்கி விடுவேன்!” என்று சிரித்தார்.

நோயலின் நாடகங்கள் வெளிப்பார்வைக்கு சிரித்து மகிழ, உல்லாசமாய்ப் பொழுதைக் கழிக்க என்று பலரை நினைக்க வைத்தாலும் அவரது பாத்திரங்கள் உண்மையில் அழுத்தமான உணர்வுகளைக் கொண்டவர்களாக இருந்தார்கள். ‘தனிப்பட்ட வாழ்க்கை’ நாடகத்தில் ஊடுருவியிருந்த கருத்து மனித உறவுகளின் நெருக்கடியான நிலைமை பற்றித்தான். மனித உறவுகள் ஒருவருக்கு ஒருவர் புரிந்துகொள்ள முடியாத சிக்கல்களைக் கொண்டிருந்தாலும் அவை மனிதர்கள் தனித்து இருக்கும் ஒருவித துக்கம் சூழ்ந்த சூழலை ஒப்புக்கொள்ள மறுக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டியது.

சோக நாடகங்களில் நோயலுக்கு முன் இருந்த படைப்பாளிகள் தொடாத பல பகுதிகளை நோயல் தம் நாடகங்களில் கொண்டு வந்தார். அவருடைய வசனங்கள் சில சமயம் கேட்போரை உலுக்கி விடும் தன்மை வாய்ந்தவனவாக இருந்தன. இந்நாடகத்தின் கதாநாயகனான எலியட்டும் அவன் மனைவி அமந்தாவும் விவாகரத்துக்குப் பின் பிரிந்து விடுகிறார்கள். அவர்கள் இருவரும் முறையே புது மனைவியையும் புதுக் கணவனையும் மணம் செய்து கொள்கிறார்கள். இரண்டு புதிய ஜோடிகளும் தேனிலவுக்கு வரும் போது ஒரே ஹோட்டலில் அடுத்தடுத்த அறைகளில் தங்கும்படியாகி விடுகிறது. இதன் விளைவாக எலியட்டும் அமந்தாவும் மறுபடியும் நெருக்கம் கொண்டுவிட அதனால் ஏற்படும் நெருக்கடிகளைச் சித்தரிக்கிறது. அவர்கள் இருவரும் ‘தாங்கள் ஒருவருக்கொருவர் சேர்ந்து வாழ முடியாது; அதே சமயம் தாங்கள் சேர்ந்து வாழாமலும் இருக்க முடியாது’ என்று உணர்கிறார்கள். அவர்களுக்குத் தொந்திரவு அவர்கள் மறுபடியும் மணந்து கொண்டவர்களிடமிருந்து அல்ல. அவர்களுக்கு அவர்களே நெருக்கடிகள்! எதிரிகள்!

ஒரு கட்டத்தில் எலியட் அமந்தாவிடம், “நாம் கொண்டாடுவோம். இந்தக் கணத்தை நாம் அருந்துவோம் வா. வந்து என்னை முத்தமிடு. உன் உடல் நாசமாகிப் போகும் முன்பு. உன் கண் ஓட்டைகளில் புழுக்கள் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருப்பதற்கு முன்னால்” என்கிறான். இத்தகைய குரூரம் தோய்ந்த வார்த்தைகள் அன்றைய தினத்தின் அவலத்தைக் குறிப்பது மட்டுமில்லாமல் பார்வையாளரை ஆழ்ந்த இருட்டிடங்களுக்கு இழுத்துச் சென்றன. இவை உள்மன அதிர்வுகளின் ஆழத்தை மறைத்து இங்கிதமும் கவர்ச்சியும் நிறைந்த மேற்பூச்சான வார்த்தைகளை உபயோகிக்கும் மனிதர்களை வெளிச்சம் போட்டுக் காண்பித்தது.













ஷேக்ஸ்பியரின் 'பனிரெண்டாவது இரவு' நாடகத்தில் வரும் வார்த்தையைக் கொண்டு நோயல் ஆறு நாள்களில் எழுதிய நாடகம் 'இன்றே அனுபவி.' இந்த நாடகம் 1939இல் எழுதப்பட்டாலும் 1942இல் தான் தயாரானது. இதற்குக் காரணம் இரண்டாம் உலகப் போர் ஏற்படுத்திய தடைகள்தாம். போரில் ஈடுபட்டிருந்த ராணுவ வீரர்களை உற்சாகப்படுத்த இருபத்தி ஐந்து வாரங்கள் மற்ற மாநிலங்களில் நாடகம் நடத்த நோயல் முன் வந்த போது நாடகத் தயாரிப்பாளர், அது முடியாத காரியம் என்று மறுத்தார். நாடக அரங்கங்களுக்குப் பெயர் பெற்ற வெஸ்ட் எண்ட் நகரிலேயே வழக்கம் போல இந்த நாடகத்தையும் நடத்தினால் போதும் என்றார். நோயல் அவரிடம், "இன்றுள்ள போர்ச் சூழலில் வெஸ்ட் எண்ட்தான் மற்ற மாநிலங்களுக்குப் போக வேண்டுமே தவிர, மற்ற மாநிலங்கள் வெஸ்ட் எண்ட்டுக்கு வர முடியாது!" என்றார்.

'இன்றே அனுபவி' நாடகம் ஒரு சுயமோகியான பிரபல நடிகனைப் பற்றியது. கேரி தனது நாடகங்களை ஆப்பிரிக்காவுக்குச் சென்று நிகழ்த்த விரும்புகிறான். அவன் தன் பிரயாணத்துக்கான ஏற்பாடுகளை செய்ய ஆரம்பிக்கையிலேயே பல தடங்கல்கள் பெண்களின் உருவத்தில் வருகின்றன. அவனுடைய மாஜி மனைவி எலிசபெத், செயலர் மோனிகா, நடிகை டாப்ஃனே என்று. போதாதற்கு அவனது மானேஜர் மாரிஸ், தயாரிப்பாளர் ஹென்றி என்று ஒவ்வொருவரும் குறுக்கிட்டு அவனுடன் பயணம் செய்வோம் என்று தொல்லைப்படுத்துகிறார்கள். இறுதியில் ஒவ்வொருவரையும் எலிசபெத் சமாளிக்கக் கேரியும் எலிசபெத்தும் தாங்கள் இருவரும் ஆப்பிரிக்காவுக்குச் செல்ல பயண ஏற்பாடுகளில் முனைகிறார்கள்.

ஒழுக்கம், குடும்பம், நட்பு, தொழில் என்னும் வட்டங்களுக்கு அப்பால் மனிதர்களின் சுய ஆதிக்கம் அவர்களை எப்படி இட்டுச் செல்லுகிறது என்பதை விசாரணை செய்யும் இந்த நாடகம், 'தன்னுடைய சொந்த வாழ்க்கையின் பிரதிபலிப்பு' என்று நோயல் ஒப்புக்கொண்டார்.

நோயலின் ஒரு முக்கியமான, பிரபலமடைந்த நாடகம்,'வாழ்வென்னும் வழிமுறை'. பின்னாள்களில் கொடி கட்டிப் பரந்த ஆல்ஃப்ரெட் லுன்ட், அவர் மனைவி லின் ஃபான்டென்னே என்ற நடிகர்கள் அவர்களின் ஆரம்ப காலத்தில் கஷ்டத்தில் உழன்ற போது நோயலின் பரிச்சயம் கிடைக்கிறது. அப்போது நோயலும் பிரபலமாகியிருக்கவில்லை. அவர்கள் மூவரும் பிரபலமான பின் ஒரு நாடகம் செய்ய வேண்டும் என்று அப்போது தீர்மானிக்கின்றனர். 'வாழ்வென்னும் வழிமுறை' இந்தப் பின்னணியில்தான் உருவானது. ரயில் பிரயாணத்தில் கதாநாயகி கில்டா, அவள் சந்திக்கும் ஜார்ஜ் என்னும் நடிகன், தாமஸ் என்னும் நாடக ஆசிரியன் - இவர்கள் மூவருக்கும் இடையே ஏற்படும் முறைகேடான காதல் சிக்கல்கள், அவற்றிலிருந்து விடுபட முடியாமல் திணறும் சூழ்நிலைகள் ஆகியவற்றை நாடகம் சித்தரிக்கிறது. இந்நாடகத்தில் தத்தம் களிப்பை ஒரு கூட்டாகக் கொண்டாடி சற்று ஒழுங்கு தவறி நடக்கும் மனிதப் பிராணிகள் தமக்கான பணியைச் செய்யாமல் அதிகாரம் காட்டும் விருப்பத்துடன் நடமாடுகிறார்கள். விட்டில் பூச்சிகளை ஒத்த இவர்கள் வெளிச்சத்தைப் பார்க்க முடியாது கண்கூசிக் கிடப்பவர்கள் மாத்திரம் அல்ல, வெளிச்சம் இல்லாத இருளையும் காணத் திராணியற்றவர்கள். இதன் காரணமாக அவர்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொள்வதும் அடுத்தவர் சிறகைக் காயப்படுத்துவதுமாகக் காலத்தைக் கொல்லப் பார்க்கிறவர்கள். நாடகத்தின் முடிவு இரு பொருள் மயக்கம் கொண்ட தோற்றத்தை உண்டாக்குவதாக இருக்கிறது. திரை மூடும் போது மூவரும் ஒன்று சேர்ந்து நகர்ந்து போகிறார்கள். சிலர் இதை உல்லாசமும் கேளிக்கையும் நிறைந்த முடிவாக எடுத்துக்கொள்கிறார்கள். மற்றவர்கள் விரசம் கலந்த, அர்த்தமற்ற, பொருத்தமில்லாத சாக்கு என்று முடிவைக் கடந்து செல்கிறார்கள். ஆனால், நோயல், "இந்த மூவரும் தங்களை பார்த்து சிரித்துக் கொள்பவர்களாக இருக்கிறார்கள் என்றுதான் நான் சொல்லுவேன்" என்றார்.

சர் வின்ஸ்டன் சர்ச்சில், ரூஸ்வெல்ட், பெர்னார்ட் ஷா, கேரி கிராண்ட், கேதரின் ஹெப்பர்ன், வர்ஜீனியா உல்ஃப், லார்ட் மவுண்ட்பேட்டன் ஆகிய சிலர் நோயலின் ரசிகர் குழுவில் இருந்தார்கள்! ●

**"ஸிந்துஜா @ ட்டி.ஆர். நடராஜன்"**
<weenvy@gmail.com>

# நீவல்

## எஸ். செந்தில்குமார்

### ஓவியம்: யோலண்டா செட்விண்ட்

கருப்புக் குடை வான் நோக்கி உயர்ந்து விரிந்தது. அதன் சத்தம் பலூன் வெடித்தது போலிருந்தது. சௌந்தர் தன் உடலை குடைக்குள் நுழைத்துக் கொண்டவன், திரும்பிப் பார்த்தான். கதவைப் பூட்டி வீட்டிற்குள் சென்றிருந்தாள் செந்தாமரை. இரும்பலான ஸ்பிரிங் கேட்டில் இன்னமும் செய்தித்தாள் சொறுவியிருந்தது. ஒரு காது இறுக்கமாகக் கட்டப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்த மஞ்சள் நிற பைக்குள் பால் பாக்கெட் இருந்தது. மேல் வீட்டுக்காரர்கள் எடுத்துக் கொண்டுப் போகவில்லை. மழை என்பதால் வராமலிருக்கலாம் என்று நினைத்தான். ஞாயிற்றுக்கிழமை அலுப்பும் சலிப்பும் அனைவருக்கும் பொதுவானது. ஆனால், தனக்கு மட்டும் எந்த அலுப்பும் சலிப்பும் இல்லை. அதேவேலை, அதே ஞாயிற்றுக்கிழமை என்று நினைத்துக் கொண்டு வாசற்படியிலிருந்து இறங்கினான்.

செந்தாமரை வாசல் படியிலிருந்து இறங்கி ரோட்டிற்குச் செல்வதுவரை நின்றிருப்பாள் என்று நினைத்தான். அவளுக்கு ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் வரை உறங்கவேண்டும், இல்லையென்றால் அன்று ஞாயிற்றுக்கிழமை ஞாயிற்றுக்கிழமையாக இருக்காது; புதன்கிழமையாக, வியாழக்கிழமையாக இருக்கும். ஏதாவது சண்டை சச்சரவு உண்டாகும். ஐந்து மணிக்கு எழுந்து குடிப்பதற்குத் தண்ணீர் பிடிக்க ஆரம்பிப்ப திலிருந்து தொடங்கும் அவளது வேலை, பாண்டியன் எக்ஸ்பிரஸ் ரயிலின் வேகமாக இருக்கும். இடையில் எந்த இடைஞ்சலும் இருக்கக்கூடாது. அவளுடைய நிறுத்தம் ஒன்று வரும். எங்கே நிறுத்தி மூச்சு வாங்க வேண்டும் என்று அவளுக்குத் தெரியும். அப்போது நிற்பாள். சிறிது மூச்சு வாங்கலுக்குப் பின் அங்கிருந்து ஓடத் தொடங்குவாள். முழுமையாக ஓடி முடிந்ததும் உறக்கத்திற்குச் சென்றுவிடுவாள்.

செந்தாமரை உறக்கத்தை நேசிக்கும் பிறவி என்று நினைத்துக் கொண்டான். அவளைப் போல் தனக்கு ஏன் உறக்கம் வருவதில்லை என்று அவன் பலமுறை நினைத்திருக்கிறான். அலுவலகத்தில் மதிய உணவுக்குப் பின் நாற்காலிகளை ஒதுக்கிவிட்டு, அமர்ந்து வேலை செய்யும் இடத்திலேயே பழைய செய்தித்தாளை



விரித்து கால்களை நீட்டி படுத்துக்கொள்வதை வாடிக்கையாக வைத்திருந்தான். அவனைப் போல மனோகரன், சாவித்திரி, சரஸ்வதி, நாகலெட்சுமி, கவிதா, வெங்கட்ராமன் ஆகியோர் தாங்கள் வீடுகளிலிருந்து இதற்கென கொண்டு வந்திருந்த துண்டை விரித்து ஒருக்களித்துவிடுவார்கள். சௌந்தர் உறங்குவதற்காக இல்லை, கால்களை நீட்டி முதுகை சிறிது நேரம் ஆசுவாசப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதற்காக மட்டும் படுத்துக்கொள்பவன். மற்ற அலுவலகர்களுக்கு உறக்கம் வந்து உறங்குவார்கள். சிலர் அமர்ந்த நிலையிலேயே கால்களை நீட்டி உறங்குவது ஆச்சரியமான விஷயமாக இருக்கும். மனோகர் லெஜ்கர்களை தலைக்கு வைத்து உறங்குவதைப் பார்க்கும் போது அவருடைய கழுத்து எலும்புகளில் கண்ணீர் வடிவதைக் காணமுடியும்.

காலையில் எழுந்தவுடன் இன்று ஞாயிற்றுக்கிழமை. வேலைக்குப் போகவேண்டுமென்கிற சோம்பேறித்தனம் உடம்புக்குள் ஒட்டிக்கொண்டது அவனுக்கு. பிற்பகலுக்குப் பிறகு விடுமுறை. மதியம் சாப்பாட்டிற்கு வீட்டிற்கு வந்துவிடலாம் என்கிற ஆசை, அந்த சோம்பேறித்தனம் வராமலிருப்பதற்காகத் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வது என்று நினைத்தான்.

உண்மையில் ஞாயிற்றுக்கிழமை பிற்பகலுக்குப் பிறகு பண்டாஃபிஸ் அலுவலகத்திற்கு விடுமுறைதான். ஆனால், பண்டாஃபிஸிலிருந்து வீடு வந்து சேர்வதற்கு மூன்று மணியாகிவிடும். நாகமலை புதுக்கோட்டைக்கு டெப்டேஷன் சென்றால் சில நேரங்களில் மாலை ஐந்து மணிகூட ஆகும். மதுரை டவுனுக்குள் குடியிருப்பதில் சௌகரியம் என்னவென்றால் எப்போது வேண்டுமென்றாலும் எங்கும் போய் வரலாம். குறிப்பாக மீனாட்சி அம்மன் கோயிலுக்குப் போகலாம். மாலை நேரத்தில் ஆடி வீதியைச் சுற்றிவிட்டு சுண்டல் கடலைப்பொரி, ஃபாப்கான் வாங்கி சாப்பிட்டுவிட்டு, பொதுஜனங்களே நானும் ஞாயிற்றுக்கிழமையில் இங்கு வந்திருக்கிறேன் பார்த்துக் கொள்ளுங்கள் என்று அடையாளப்படுத்தி விட்டுச் செல்லலாம் என்று அவனுக்குத் தோன்றியது.



மழை அவனை வேகமாக நடக்கச் செய்தது. வழக்கமான நேரந்தான். வார நாட்களைப்போல் 8.10க்கு புதூருக்குச் செல்லும் பேருந்தைப் பிடித்துவிட வேண்டுமென்கிற வேகம் எதுவுமில்லை. ஓடும் பேருந்தைத் துரத்திப் பிடிக்க வேண்டுமென்கிற பதற்றமுமில்லை. செந்தாமரை, மதிய சாப்பாடு செய்து தர வில்லையென்பதால் பத்து, இருபது நிமிடங்கள் முன்கூட்டியே புறப்பட முடிந்தது அவனால். உண்மையில் வேலைக்குச் சேர்ந்து ஐந்து வருடங்கள் முடிந்து இது ஆறாவது வருடம். ஐந்து வருடங்களாகச் செல்கிற பழக்கம் அவனுக்கு நிதானத்தைத் தந்திருந்தது.

அவன் யோசனையாக நடந்தான். காலையில் எழுந்தவுடன் சூடான தேநீருக்காகக் காத்திருப்பதில் தொடங்கி மாலை வேலை முடிந்து வீட்டிற்கு வரும் போது தம்ளரில் எடுத்து வைக்கப்பட்டிருக்கும் ஆறிப்போன தேநீரை சூடுப்படுத்தி குடிப்பதுவரை மந்தத்தன்மை உடல் முழுவதும் குடியிருக்கும். நாள் முழுக்க, மாட்டுவண்டியில் கட்டப்பட்ட மாடுகளைப்போல பயணிக்க வேண்டும். ஏதோ குரலுக்குச் செவி சாய்த்து நடக்க வேண்டும். தடித்த குரலுக்கு ஒதுங்க வேண்டும். அரட்டலுக்கும் மிரட்டலுக்கும்பயந்துநிற்கவேண்டும்.அழைப்பவர்கள் அனைவரின் முன்பாகவும் ஆஜர் ஆகவேண்டும். மூத்த அதிகாரிகள், வயதில் மூத்தவர்கள், பெண் அலுவலர்கள், வாடிக்கையாளர்கள், வாட்ச்மேன் என்று பலரும் ஏவலாகச் சொல்லும் வேலைகள். சமயங்களில் சகிக்க முடியாத அரசியல் கருத்துகளை, கேட்கவே முடியாத சினிமா விமர்சனங்களை எல்லாம் கேட்டுக்கேட்டு மரத்துப்போன காதுகளுடன் அமர்ந்திருக்க வேண்டும். அவர்கள் பேசுவதைக் கேட்காமலும் இருக்கலாம். பதில் சொல்லக்கூடாது; எதிர் கருத்துச் சொல்லக்கூடாது; விவாதிக்கக்கூடாது. அவர்கள் சொல்வதற்கு உடனே சரி என்றும் தலையை ஆட்டக்கூடாது. யோசிப்பதுபோல் நடிக்கவேண்டும். நடிப்பது வெளியே தெரியக்கூடாது. ‘ஆமாம், நீங்க சொல்லுறது சரிதான்’ என்பதை உண்மையாகச்

சொல்வதுபோல் நம்ப வைக்கவேண்டும். முக்கியமாக பெண் அதிகாரிகளை நம்ப வைக்க வேண்டும். அவர்கள் சொல்கிற புகார்களை, குற்றச்சாட்டுகளை கால் வலிக்க, இடுப்பு வலிக்க நின்று கேட்க வேண்டும். கேட்டுவிட்டு அவர்கள் மீது பரிதாபப்படுமளவுக்கு வார்த்தைகளை அதுவும் ஒரே சொல்லில் சொல்லிவிட்டு அங்கிருந்து நகர வேண்டும். நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தால் பிறபெண் பணியாளர்கள் கோபித்துக்கொள்வார்கள். சௌந்தர் மூன்று வேளை உண்ணும் உணவுக்கு அவர்கள் பேசுவதைக் கேட்பதுதான் தனக்கு இறைவன் தந்திருக்கும் மிகப்பெரிய தண்டனை என்று நினைத்துக்கொள்வான்.

இன்னும் பத்து வருடங்கள் வேலை செய்தால் போதும். கையில் சிறிது பணம் நிற்கும். மகளின் திருமணத்திற்கு சிறிது பணத்தை சேகரித்து வைத்திருக்கலாம் என்கிற நட்பாசையில் தினமும் காலையில் சூடாக டீக்குக் காத்திருப்பான். மாலை நேரத்தில் வீட்டிற்கு வந்து ஆறிப்போன டீயை சூடுப்படுத்தி குடிக்கும் போது இன்று வருடத்தில் ஒருநாள் கழிந்துவிட்டது, அப்பாடா என்று நிம்மதி வரும். அந்த நிம்மதிக்காகவே வேலைக்குச் சென்று வரலாமென்கிற பைத்தியக்காரத்தனம் மனதில் குடியிருந்தது அவனிடம்.

மழை சிறிது வலுத்தது. காற்றும் வீசியது. மேற்குப் பக்கமிருந்து கிழக்குப் பக்கமாக சாரல் விழுந்தது. இடதுபுற தோள்பட்டை நனைந்தது. முதுகு நனைந்தது. குடையை மாற்றி வைத்துப் பார்த்தான். முகத்தில் சாரல் விழுந்தது. கைகள் நனைந்தன. குடையை பின்பக்கமாக சாய்த்து வைத்துப் பார்த்தான். வலதுபுற தோள்பட்டை நனைந்தது. முன்போல் குடையை பிடித்துக் கொண்டு நடந்தான்.

இன்று அலுவலகத்தில் என்ன வேலை, எந்த அதிகாரியிடம் கையெழுத்து வாங்க நிற்க வேண்டும், யார் தன்னை பழிவாங்கவேண்டுமென்று வேலைகளை நகர்த்துவார்கள், என்னென்ன திட்டமிடுவார்கள் என்று யோசித்தபடி நடந்தான். பெரியாரில் 8.10 புதூர் பேருந்து நின்றிருந்து. இருக்கைகள் முழுவதும் மழைநீர். ஜன்னல் கதவை இழுத்துப் பார்த்தான். அசையவில்லை. மூடும் கதவு கொண்ட இருக்கையில் அமர்ந்துகொண்டான். தல்லாகுளம் செல்வது வரை மழையைப் பற்றி கவலை இல்லை.

தல்லாகுளத்துக்கு மாற்றலாகி வரும்போது இதேபோல் மழைக்காலம். தினமும் மழை. தாமதமாக வருவது, வாடிக்கையாளர்களுக்கு ரசீது எழுதி தருவதில் தாமதப்படுத்துவது, லோன் கேட்டு வருபவர்களிடம்கோபமாகபேசுவது,வேண்டுமென்றே வேலைகளை தாமதப்படுத்துவதுபோன்ற குற்றங்களை தல்லாகுளம் கிளை மேலாளர் சௌந்தரின் மேல் சுமத்தினார். தலைமை அலுவலகத்திற்குப் புகார் தர வேண்டுமென்றும் தங்களுடைய கிளையின் வேகத்திற்கு ஒத்துவரமாட்டான் என்றும் மதிய உணவு இடைவேளையில் இவனைப் பற்றிப் பேசிக்கொண்டதைக் கேட்டிருக்கிறான். யாருடனும் ஒத்துப்போகாமல் இருப்பது, முக்கியமாக பேசாமல் இருப்பது, வாரத்தில் ஒருநாளாவது சக பணியாளர்களுக்கு டீ, வடை வாங்கித்தராமல் இருப்பது, பிறர் வாங்கித் தரும் டீயை குடிக்காமல் இருப்பது, அக்கிளையில் கொலை செய்த குற்றமாகக் கருதப்பட்டது. அக்கிளையில் பெண்களுக்கு நாப்கின், முகப்பவுடர், அறுந்த செருப்பை தைத்துத் தருவது, கோதுமை மாவு அரைத்து தருவது, அரிசி வாங்கி வருவது, டிபன் வாங்கித் தருவது (அதற்குச் சொந்த காசை செலவு செய்பவன் ரொம்பவும் நல்லவன். காசை வாங்கிக்கொண்டுச் செல்பவன் சுமாரான நல்லவன். காசு போட்டு வாங்கிக் கொடுத்து காசைத் திரும்பக் கேட்டால் அவனை மாதிரி மோசமானவன் யாருமில்லை என்று சொல்வார்கள்.) உள்ளிட்ட வேலைகளை வயது வித்தியாசமில்லாமல் ஆண்கள் செய்து வந்தனர். முக்கியமாக வெங்கட்ராமன்.

வெங்கட்ராமன், கதவிலிருக்கும் துருப்பிடித்த நீளமான ஆணி ஒன்றின் உருவத்தைக் கொண்டவர் என்பது அவனது மதிப்பாக இருந்தது. எப்போது வேண்டுமென்றாலும் கீழே விழுந்துவிடலாம். அல்லது பளுது பார்க்கும் போது மாற்றுவதற்கு வாய்ப்புள்ளது. ஆனால், தொடர்ந்து வெங்கட்ராமன் தன்னுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தி பத்து வருடங்களுக்கும் மேலாக அக்கிளையில் பணியாற்றி வருவது மிகப்பெரிய சாதனையாகக் கருதப்பட்டது. கிளையில் பணியாற்றி வருவதென்றால் கிளையில் பணியாற்றும் பெண் பணியாளர்களுக்கு என்று பொருள்.

பேருந்தில் ஆட்கள் யாருமில்லாதது அவனுக்குப் பயத்தைக் கொடுத்தது. பேருந்து புறப்படுவது குறித்து யாரிடம் கேட்பது என்று தெரியவில்லை. ஓட்டுநர், நடத்துநர் என்று யாருமில்லை. பக்கத்திலிருந்த பிளாட்பாரத்தில் நின்றிருந்த பயணிகளிடம் கேட்டான். அவர்களுக்கு இவனது பாஷை புரியவில்லைபோல. அமைதியாக முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். தினமும் வழக்கமாக இந்நேரத்திற்குப் புறப்படும் பேருந்துதான். ஆனால், இன்று ஏன் ஓட்டுநர் வராமலிருக்கிறார் என்கிற சந்தேகம் எழுந்து முன் கண்ணாடி வழியாக எட்டிப் பார்த்தான். மழை வலுவாக பெய்தது. ஓட்டுநர் பாதி நனைந்திருந்தார். ஆனால், தலையில் தொப்பி மாட்டியிருந்தார். கையில் சிகரெட் இருந்தது. அவருக்குப் பின்னால் நடத்துநர் நின்றிருப்பது தெரிந்தது.

அவன் பேருந்துப் புறப்படுவதற்கு நேரமாகுமா என்று கேட்டான். அவர்கள் இருவரும் அவனது முகத்தைப் பார்த்துவிட்டு பதில் பேசாமல் பேருந்தில் ஏறினார்கள். நடத்துநர் ஒரு இருக்கையிலும் ஓட்டுநர் அவருடைய இருக்கையிலும் அமர்ந்துகொண்டார்கள்.

ஓட்டுநர் மிகத் தீவிரமாக சிகரெட்டைப் புகைத்தார். அவருடைய முகத்தில் குழப்பமும் கோபமும் தெரிந்தது. யாருக்காகவோ காத்திருப்பது போன்று பேருந்து நிலையத்தைச் சுற்றிப் பார்த்துக்கொண்டார். பிறகு என்ன நினைத்தாரோ திடீரென பேருந்தை வேகமாக இயக்கத் தொடங்கினார். பேருந்து நிலையத்தை விட்டு வெளியேறி ரயில்வே ஸ்டேஷனை நோக்கி அசுர வேகத்தில் அவர் சென்றது அவனுக்குப் பயத்தை உருவாக்கியது. சாலையில் தேங்கியிருந்த மழை நீர் பேருந்தின் இருபுறமும் இறக்கை மாதிரி விரிந்தது. பேருந்தை வேகமாக இயக்க சாலையில் யாருமில்லாதது ஒரு காரணமாகக் கூட இருக்கலாம். மற்றொன்றாக ஓட்டுநர் எதிர்பார்த்திருந்த நபர் இன்னமும் வரவில்லை என்பதாகக் கூட இருக்கலாம் என்று அவன் நினைத்தான். திரும்பிப் பார்த்தான். பேருந்தின் கடைசி இருக்கையில் இரண்டு பேர் அமர்ந்திருந்தனர். பேருந்தில் வேறு யாருமில்லை.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து பேருந்து புறப்பட்டு குட்ஷெட் தெருவைக் கடந்து சேதுபதி ஹைஸ்கூல் சிக்னலில் நின்றது. அங்கு நின்றிருந்தவர்கள் மடமடவென பேருந்துக்குள் ஏறி அமர்ந்தனர். நடத்துநரும் ஓட்டுநரும் எவ்வித மறுப்புமின்றி பயணிகளை ஏற்றிக் கொண்டது ஆச்சரியமளித்தது. பேருந்துக்குப் பின்னால் நின்றிருந்த ஆட்டோவும் லாரியும் ஹாரன் அடித்தனர். ஓட்டுநர் இயல்புக்குத் திரும்பியிருந்தார். பேருந்தை மெதுவாக இயக்கினார். அவருடைய முகம் மலர்ந்திருந்ததை சௌந்தர் பார்த்தான். அவருடைய சிரிப்பும் ஸ்டைலாக பேருந்தை இயக்குவதும் விசித்திரமாக இருந்தது. முன்னால் அமர்ந்திருந்தப் பெண் அவரைப் பார்த்து சிரிப்பதை தற்செயலாகப் பார்த்தான். அவள் ஓட்டுநரை எதோ சொல்லி சிரித்தாள். அதனை ரசித்தவராக மேலும் ஸ்டைலாக பேருந்தின் ஸ்டேரிங்கை தடவிக்கொடுத்தார். அவருடைய சிரிப்பு உதட்டிலிருந்து வடிந்து உடம்பு முழுக்க வடிந்தது. அவ்வளவு துள்ளலாக இருந்தார்.

“பஸ் ஸ்டாண்டுக்கு வராம எதுக்கு சிக்னல்ல நிக்குற” என்று ஓட்டுநர் அப்பெண்ணிடம் கேட்டதற்கு அவள் பதில் சொல்லாமல் சிரித்தாள். நடத்துநர் பயணிகளுக்கு டிக்கெட் தந்துவிட்டு அவளினருகே நின்று கொண்டார். அவளது இருக்கையின் மேல் சாய்ந்துகொண்டவர், தன்னுடைய உள்ளங்கையை கொண்டு அவளது முதுகைத் தேய்த்ததை சௌந்தர் பார்த்தான். அவள் அதற்கு ஒன்றும் மறுப்பு சொல்லவில்லை. இன்னும் கொஞ்சம் தேய்த்துக்கோ என்பது போல் தனது முதுகைக் காட்டினாள்.

சௌந்தர் தல்லாகுளத்தில் இறங்கி அலுவலகத்திற்குச் சென்றான். குமரன் காப்பிக் கடையிலிருந்து வாங்கிய சாம்பார் வடையின் மணம் அலுவலகம் முழுக்க பரவியிருந்தது. இந்நேரத்தில் யார் சாம்பார் வடை சாப்பிட்டிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. சௌந்தர் அவனது இருக்கைக்குச் சென்று அமர்ந்துகொண்டான். பழைய துணியை எடுத்து சுத்தம் செய்தான். இன்னமும் தல்லாகுளம் கிளைக்கு கணினி வரவில்லை. ஒவ்வொரு கிளையாக கணினி பொருத்திக் கொண்டு வருகிறார்கள்.

இளநிலை கணக்கர் தாரா, கம்ப்யூட்டர் வந்தால் தன் வாழ்நாளை அதற்காக அர்ப்பணித்து விடுவதாகச் சொன்னாள். எதற்கென்று தெரியவில்லை. அவளது விரல்கள் இப்போது டைப் செய்வது போல் ஆடிக் கொண்டிருந்தன. தாராவுக்குத்தான் சாம்பார் வடை பிடிக்கும். அவளது இருக்கையைப் பார்த்தான். ஆளில்லை. ஆனால், அவளுடைய தோள் பை இருந்தது. செல்ஃபோன் மேஜையின் மேல் இருந்தது. கழிப்பறையிலிருப்பாள் என்று பேரேட்டை எடுத்து நேற்றைய நடவடிக்கைகளுக்கான சலான்களை எடுத்து பதிவிட்டான். வளையல்கள் குலுங்கும் சத்தமும் அதைத் தொடர்ந்து கால் கொலுசின் ஓசையும் மாறிமாறிக் கேட்டது. அவன் நிமிர்ந்து பார்த்தான். தாரா இன்னமும் கழிப்பறையில்தான் இருக்கிறாள். அவசரப்பட்டு கழிப்பறைக்குச் செல்லக்கூடாது.

சௌந்தர், தல்லாகுளத்திற்கு வந்த புதிதில் தாரா கழிப்பறையிலிருப்பதைக் கவனிக்காமல் உள்ளே சென்றான். வேண்டுமென்றே வந்து எட்டிப் பார்த்ததாகக் குற்றம் சுமத்தினாள். அன்றைய தேதியில் டெபுடேசனாக வந்திருந்த மூர்த்தி, “வாரம் வாரம் சாம்பார் வடை வாங்கிக் கொடுத்து கரெக்ட் செய். இல்லைன்னா வேலை செய்ய விடமாட்டா” என்று பயமுறுத்திவிட்டுச் சென்றான்.

தாராவின் கணவர் விற்கும் எண்ணெய் பாக்கெட்டை மாதத்திற்கு ஒருமுறை வாங்கிக்கொண்டால் சிறிது அவளது தாக்கத் திலிருந்துத் தப்பித்துக் கொள்ளலாமென்று ஒருமுறை வாங்கினான்.

“இதெல்லாம் உங்கள யாரு வாங்கிட்டு வரச்சொன்னா. பேசாம போயிட்டு பேசாம வரவேண்டியதுதான. தாரா என்ன பெரிய இவளா. அவ கிட்ட வாங்கலன்னா என்ன செய்வா. கொடுத்துட்டு காச வாங்கிட்டு வாங்க” என்று செந்தாமரை சாமி வந்து ஆடினாள். செந்தாமரையை சமாதானப்படுத்துவதற்கு பெரிய போராட்டமாக இருந்தது. கோயில் கோயிலாகப் போய் விளக்குப் போட்டாலும் தன்னுடைய பாவம் போகாது என்று நினைத்துக் கொண்டான்.

இன்னமும் வளையல் சத்தமும் கொலுசு சத்தமும் தீவிரமாகக் கேட்டது. அதன் ஓசை சற்று வித்தியாசமாக இருந்தது அவனை பயமுறுத்துவது போலிருந்தது. எதோ வேண்டுமென்றே ஓசை எழுப்புவது மாதிரியாக இருந்தது. என்ன நடந்தாலும்

இன்னமும் சிறிது நேரத்தில் மானேஜர் வந்துவிடுவார். அதுவரை இந்த இடத்தைவிட்டு நகரக்கூடாது என்று அமைதியாக தலையை கவிழ்த்திக்கொண்டான். கணக்குகளுக்குள் மனம் நுழையவில்லை. கழிப்பறை யிலிருந்து வரும் ஓசை காதுக்குள் மட்டுமல்லாது உடம்பு முழுக்க நுழைந்தது.

நல்ல வேளையாக மானேஜர் வந்துவிட்டார். வந்ததும் வராததுமாக நேராக கழிப்பறைக்குள் நுழைந்தவர், "எங்க விழுந்த. பாத்து நடக்கக்கூடாதா" என்றுவருத்தமாகக்கேட்டதைசௌந்தர்கவனித்தான். அவனும் எழுந்து என்ன ஏது என்று கழிப்பறையை எட்டிப் பார்த்தான். தாரா தன்னுடைய முழங்கால் வரை சேலையைத் தூக்கி வைத்துக்கொண்டு நின்றிருந்தாள். வெங்கட்ராமன் அவளது பாதத்தை எண்ணெய் இட்டு நீவிக் கொண்டிருந்தான். அவன் ஒவ்வொரு முறையும் பாதத்தை நீவும் போது அவனது வழுக்கைத் தலையானது அவளது இரண்டு தொடைகளுக்கு அருகில் சென்று நின்று திரும்பியது. எதோ விளையாட்டின் பயிற்சியைப் போல் அவன் தீவிரமாக செயல்பட்டுக் கொண்டிருந்தான். தாரா தன்னுடைய தொடைகளுக்கு அருகில் அவனது தலை வரும்பொழுதெல்லாம் கண்களை மூடிக்கொள்வதும் வளையல் குலுங்க கைகளை ஆட்டுவதுமாக இருந்தாள். சௌந்தர் அவளது கால்களைப் பார்க்கவில்லை. தன்னுடைய கால்களைப் பார்த்தான் என்று புகார் சொல்லக்கூடும், அல்லது கால்களைப் பார்த்ததற்காக சாம்பார் வடை வாங்கிக் கொடு என்று கேட்டாலும் கேட்பாள் என்று கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டான்.

சௌந்தர் தன்னுடைய இருக்கையில் வந்து அமர்ந்துகொண்டான். அலுவலகத்திற்கு வந்த சரஸ்வதி, நாகலெட்சுமி, கவிதா ஆகியோர் நேராக கழிப்பறைக்குச் சென்று தாராவின் கால்களைப் பார்த்துவிட்டுத்தான் தங்களது இருக்கைக்கு வந்து அமர்ந்தார்கள். வாடிக்கையாளர்கள் அலுவலகத்திற்கு நுழைந்ததும் கழிப்பறைக்குத் தான் ஒருவேளை செல்வார்களோ என்று சௌந்தர் நினைத்துக் கொண்டான். அப்படியாக எதுவும் நடக்கவில்லை. இரண்டு வாடிக்கையாளர்கள் ஒன்றாக வந்தார்கள். நாற்காலியில் அமர்ந்து கொண்டார்கள்.

சரஸ்வதி தன்னுடைய நாற்காலியில் அமர்ந்து கொண்டதும் மிகவும் சிரமத்துடன் கண்களை உருட்டி விழித்து அழத் தொடங்கினாள். அவளது அழுகையின் சத்தம் கழிப்பறைக்குக் கேட்க வேண்டுமென்கிற ஆவல் அவளிடமிருந்தது. அதற்காக அவள் அப்படி பிரயாசைப்பட்டாள். ஆனால், பக்கத்திலிருந்த கவிதாவுக்குக்கூட அவளது அழுகையின் குரல் கேட்கவில்லை. விசும்புவதும் கைக்குட்டையில் கண்களை ஒற்றிக்கொள்வதுமாக இருந்தவள் எழுந்து கழிப்பறையை எட்டிப் பார்த்துக் கொண்டாள். இன்னமும் நீவல் முடியவில்லையென்று தெரிந்ததும் அவள் பெருமூச்சு விட்டபடி, "வெங்கி நீவுனா சரியா போகும்" என்று ஏக்கமாகச் சொன்னாள். அப்போது அவளுடைய கண்களில் நீர்த்துளிகள் இருந்ததை அவனால் பார்க்க முடிந்தது. உண்மை யிலே அழுதிருக்கிறாளா என்று ஆச்சரியமாகப் பார்த்தான்.

தாரா மெதுவாக வெங்கட்ராமனின் தோள்ப்பட்டையைப் பிடித்தவாறு நடந்து வந்தாள். கவிதா உணர்ச்சி வசப்பட்டு, "பாத்துப்பா பாத்து" என்று கத்தினாள். அவளுடைய கத்தல் சத்தம் கேட்டு வாட்ச்மேன் உள்பட பலரும் திரும்பிப் பார்த்தார்கள். தாரா அவள் சொன்னாலும் சொல்லவில்லையென்றாலும் மெதுவாகத்தான் நடந்துவருவாள். தரை முழுக்க அவளுடைய ஒருபாதத்தின் எண்ணெய் தடம் விழுந்து விழுந்து பதிந்து பதிந்து மெதுவாக வந்தது. தாரா அவளுடைய இருக்கையில் அமர்ந்து கொண்டதும், "சூடா காப்பிக் குடி சரியாக போகும்" என்று சரஸ்வதி ஆதங்கமாகச் சொன்னாள்.

"வேண்டாக்கா."

"வெங்கி போப்பா போயி சூடா காப்பி வாங்கிட்டு வா" என்று கடுமையாக வெங்கட்ராமனுக்கு உத்தரவிட்டாள். வெங்கட்ராமனும் அதற்காகக் காத்திருந்தது போல் தூக்குவாளியை எடுத்துக் கொண்டு சரஸ்வதியிடம் பணத்தை வாங்கிக் கொண்டுச் சென்றான்.

"வீட்டில பொங்கல் போட்டேன். சாம்பார் வடைய கடையில வாங்கி தின்னுட்டு கை கழுவப் போனேன். சட்டுன்னு வழுக்கிருச்சு" என்று சற்று முன்பாக நடந்த நிகழ்வை விளக்கத் தொடங்கினாள். வழக்கமான உற்சாகத்தில் துள்ளலில் அவளது குரல் இருந்ததை சௌந்தர் உணர்ந்தான். இனி மதியம் ஒருமணி வரை அவளுடைய காட்சி விவரனையிலிருந்து யாரும் தப்ப முடியாது என்று அவனுக்குத் தெரியும். தலைமை அலுவலகத்திலிருந்து தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசுவார்கள். நலம் விசாரிப்பார்கள். இன்று ஞாயிற்றுக்கிழமை என்பதால் மற்ற கிளை அலுவலத்திலிருக்கும் அவளது ரசிகர்கள் அவளைத் தேடி பார்க்க வரலாமென்று சௌந்தர் நினைத்தான்.

வெங்கட்ராமன் காப்பி வாங்கிக்கொண்டு வந்தான். காப்பி சாப்பிட்டு முடிப்பதற்குள் இரண்டு ஃபோன் வந்து வழுக்கி விழுந்ததைக் குறித்து விசாரித்தார்கள். அவளது பொறுமையான பதிலும் காட்சி விவரணைகளும் இன்னமும் எத்தனை முறை கேட்டாலும் சலிப்பு ஏற்படாத வகையில் இருந்தது. இன்னொரு தடவை சொல்லமாட்டாளா என்கிற ஏக்கம்தான் வந்தது.

பன்னிரெண்டு மணிக்கு முனிச்சாலை யிலிருந்து பன்னீர் (அவளது முன்னாள் காதலன்)



வந்து சேர்ந்தான். பன்னீர் முழுக்கை சட்டை அணிந்திருந்தான். சட்டையை பேண்ட்டுக்குள் உள்ளே விட்டு டக் செய்திருந்தான். அவனது வயிறும் பின்பகுதியும் விசித்திரமாகத் தெரிந்தது. கருப்புக் கண்ணாடியை சட்டையின் முதல் பித்தான் மாட்டும் இடத்தில் தொங்கவிட்டிருந்தான்.

அலுவலகத்திற்கு நுழைந்ததும் தாராவின் கால்களைத் தேடி வந்து நின்றான். நாய்குட்டியின் தலைகுனிவோடும் எஜமானியைத் தவிர வேறுயாரிடமும் செல்லாத பயத்தோடு நிற்பதைப் போல் பன்னீர், தாராவின் கால்களைப் பார்த்தவாறு நின்றிருந்தான். சரஸ்வதி, கவிதா, நாகராணி யாரும் அவனிடம் பேசவில்லை. அவனும் அவர்களை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அதற்கு நேரமில்லை. கால்களைத் தவிர வேறு எதையும் பார்க்கக் கூடாது என்பதில் குறியாக இருந்தான். தாராவும் மனதார அவனுக்கு கால்களைப் பார்ப்பதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து தந்திருந்தாள். அவளது இரண்டு முழங்கால்களும் தெரிந்தன.

பேரேடுகளை டப்டுப் என்று மூடுகிற சத்தத்தைத் தொடர்ந்து காசாளர் தன்னுடைய கதவுகளை அடைத்துக்கொண்டு வெளியே வரும் சத்தம் கேட்டது. அன்று நாகராணி காசாளராக இருந்தாள். எவ்வளவு ரூபாய், என்ன பிரச்சினை, கணக்கு முடிய எவ்வளவு நேரமாகும் என்று யாருக்கும் தெரியாது. தாரா வழுக்கி விழுந்த நேரம் கணக்கு முடிந்து லாக்கரில் கொண்டுபோய் வைத்துப்பூட்டினார்கள். நிம்மதியாக இருந்தது.

இன்னமும் பத்து பதினைந்து நிமிடங்களில் அலுவலகம் நேரம் முடியப் போகிறது. பிற்பகல் விடுமுறையை உற்சாகமாக வீட்டில் கறியும் கோழியும் மீனுமாக உண்டு உறங்கி கழிக்கப்போகிற சந்தோசத்தில் நாகராணியும் சரஸ்வதியும் கவிதாவும் சத்தமாக பேசத் தொடங்கினார்கள். கோலத்தின் மையம் எங்கே, முடிவு எங்கே என்று தேடிப் பிடிக்க வேண்டும். அதுபோலிருந்தது அவர்களுடைய பேச்சு. மிக்ஸியில் ஆரம்பித்து, கடந்த வருடம் தீபாவளிக்கு மிக்ஸர் சாப்பிடுவதை ஞாபகப்படுத்தி, மினிகிரைண்டர் எந்த கடையில் வாங்கலாம் என்று பேச்சு மெதுவாக நகர்ந்து சென்றது.

ஒரு மணி. தாரா எழுந்து நின்றாள். அவளது கால்களைப் பிடித்தவாறு தரையில் அமர்ந்திருந்த பன்னீர், “வெங்கட்டு உன் காலைத் தொடலாம். நான் தொடக்கூடாதா” என்று அவளது கால்களைப் பிடித்து இழுத்தான். தாரா அவனை வேகமாக காலால் உதறிவிட்டு நடந்தாள். அவளது வேகமான நடையை அங்கிருந்தவர்கள் அனைவரும் பார்த்தனர். அவள் நடக்கும் போது எண்ணெய் தடம் தரையில் விழவில்லை. பன்னீரின் இரண்டு உள்ளங்கையிலும் எண்ணெய் ஒட்டியிருந்தது. ●

எஸ். செந்தில்குமார்
<ssenthilkumar.writter@gmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்

## ஐந்து நட்சத்திரம்



ஒப்புக்கொண்டு முடிக்கப்படாத சுடோக்குகளும்
தோல்வியைத் தழுவிய சுடோக்குகளும்
மனதின் நிலவறையில் சதா அழுது கொண்டிருக்கின்றன
வெற்றியடைந்த சுடோக்குகள்
கர்வத்துடன் அமைதி காத்து
நிலவறையின் தாழ்வாரங்களில்
பவனி வருகின்றன
ஆயின்...
அவையாவும்
எனது அடிமைகள்தான் என்று
உணர்த்திக் கொண்டேதான் இருக்கிறேன்
ஆனால்,
அவை செவி மடுக்க மறுக்கின்றன
சூன்யம் நுழையாமலிருக்க ஓயாது கரையும்
ஏதோ ஒரு மதியத்தின் ஒற்றை காகம்

## விளையாட்டு

ஓர் அந்தியில்
அவதியின் நினைவாற்றங்கரையில்
இனியான காலத்தின் நதி
கீழடுக்கில் புரண்டோடுகிறது
மூழ்கித் தேடிப்பிடித்து
அதனுள் நுழைந்து நீரலைகின்றேன்
காலத்தின் மச்சங்கள்
நினைவுகளின் அழுக்கை
சுத்தம் செய்கின்றன
துலங்கிய மங்கலான காலத்துடன்
விளையாடிய களைப்புடன் கரையேறுகின்றேன்
கரையில் காத்திருந்த
உடைமைகளை காணோம்
அந்தியும் வேறோர் அந்தி

## பௌர்ணமியின் மாயம்

அப்பா பலருக்கும் செலவு செய்தார்
தன்னை (குடும்பம்) பார்த்துக் கொள்ளவில்லை

என் தேவையை நானே பார்த்துக் கொள்கிறேன்
யாரையும் அணுகுவதில்லை
பிறருக்கும் செலவு செய்வதில்லை

தம்பி பலருக்கும் உதவி செய்கின்றான்
(செலவு செய்வதில்லை)
தன்னையும் பார்த்துக் கொள்கிறான்

அவரவர் பிராயத்தில் மூவரும்
ஒரே நதியில் அதே படித்துறையில் தான் குளித்தோம்
பிடித்த பழைய திரைப்பட பாடலை அம்மா பாட
சேர்ந்து
ஒரே பௌர்ணமியில் தானே ரசித்தோம்.

**"டி. கண்ணன்"** <krishnaswamy164@gmail.com>

# இமையம்
# உடல் நலமின்மை கதையாடல்களின் பிதாமகன்!
## ‘இப்போது உயிரோடிருக்கிறேன்’ நாவலை முன்வைத்து

### த. மார்க்ஸ்

தீவிர உடல் நலமின்மை / நோய்மை என்பது ஒரு தனிநபரின் வாழ்க்கை ஓட்டத்தில் நீக்கவியலாத இடைவெளியை உண்டுசெய்கிறது. உடல்நலமற்றவரின் மீது இத்தகையதொரு இடைவெளி மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்துவதோடு இத்துன்பியல் அனுபவமானது ஆழ்நினைவுகளில் வெட்டப்பட்ட ஒரு வடுவாகவே மாறிவிடுகிறது.

மருத்துவ மானுடவியல் ஆய்வாளர்கள் இத்தகையதொரு இடைவெளியை நோயாளிகள் எவ்வாறு தைத்து சரிசெய்து கொள்கிறார்கள் என்பதை உடல் நலமின்மை கருத்தாடல்கள் மூலமாக கண்டறிந்து சொல்வதுண்டு. உடல் நலமின்மை சார்ந்த அனுபவங்களின் நினைவலைகளை கூட்டாக ஒன்றிணைத்து சொல்வதே இக்கருத்தாடல்களின் நோக்கமாகவும் இருந்தது. இவை ஒரு விதத்தில் பாரம்பரிய மருத்துவ நோய் நேர்வுக் குறிப்புகளிலிருந்து வித்தியாசப்பட்டது. நோய் நேர்வுக் குறிப்புகள் பொதுவாக ஒரு நோயாளியின் உடல்நலமின்மையை பொதுவான ஒரு நோயோடு தொடர்புபடுத்தி அவரது நோய்க்கான அறிகுறிகள் மற்றும் சிகிச்சை வரையறைகள் ஆகியவை குறித்து விவரித்துச் செல்லும். ஆனால், உடல் நலமின்மை கதையாடல்கள் உடல்நலமற்றவரின் சுய அனுபவங்களை, நோய் குறித்த புரிதலை, சமூகக் கலாச்சார எதிர்வினைகளை அலசி ஆராய்ந்து நோயால் பாதிக்கப்பட்டவரை நோய்த்தாக்குதலுக்கு வெளியே இருக்கும் சமூகம் எவ்வாறு ஒரு அந்நியனாக கட்டமைப்புச் செய்கிறது என்பதை உணர்த்திச் செல்லும். ஆகவே, இத்தகைய உடல் நலமின்மை கதையாடல்களில் நோயாளியும் அவரை குறிவைத்து தாக்குகிற சமூக கலாச்சார கட்டமைப்புகளும் பிரதான பாத்திரங்களாக மாற்றப் பட்டு கதையாகவாசகர்களுக்கு முன்வைக்கப்படுகிறது.

நோயாளியின் நேர்வுக் குறிப்பு நோயின் அறிகுறிகளை, தன்மைகளை, சிகிச்சை முறைகளைப் பற்றி மட்டுமே பேசிவந்ததற்கு மாறாக உடல் நலமின்மை கதையாடல்கள் உடல்நலமற்றவரின் சமூக விழுமியங்கள், நோயாளியை அது எதிர்கொள்கிற



விதம் ஆகிய அனைத்தையும் அலசுகிறது. குறிப்பாக, ஒரு குழுவுடைய அனுபவங்கள் (மருத்துவமனை, மருத்துவர்கள், செவிலியர்கள் மற்றும் குடும்ப நபர்கள்) எப்படி உடல் நலமற்ற தனிநபரின் அனுபவத்தை வடிவமைக்கிறது, எவ்வாறு கலாச்சார விழுமியங்களும் சமூக உறவு நிலைகளும் உடல் நலமின்மையை எதிர்கொள்கிறது, நோய்மை என்கிற கருத்தாக்கத்தை ஒரு சமூகமே எப்படி உருவாக்க உதவுகிறது என்பதையெல்லாம் இத்தகைய உடல்நலமின்மை கதையாடல்கள் (Illness Narratives) மிகவும் ஆழமாக சமூகஉளவியல் தன்மையோடு வெளிச்சம் போட்டு காட்டுகிறது.

இந்த இலக்கிய வடிவம் தமிழுக்கும் இந்தியாவுக்கும் ஒரு புதிய வடிவமே என்றாலும் இமையம் தனது சமீபத்திய நாவலான ‘இப்போது உயிரோடிருக்கிறேன்’ என்கிற படைப்பின் மூலம் இந்திய இலக்கிய வெளியில் உடல் நலமின்மை கதையாடல்களில் தனது கதையை முதன்மையானதாக மிக இலகுவாக படைத்திருக்கிறார்.

சமூகத்தின் விளிம்புகளில் சிக்கித் தவிக்கும் அடித்தள மக்களின் வாழ்வியல் அனுபவகங்களை அதே உணர்ச்சிகளோடு வாசகர்களுக்கு நகர்த்துவதில் இமையம் கெட்டிக்காரர். இவரது மிகச் சமீபத்திய

நாவலில் சிறுநீரக பிரச்சினையால் பாதிக்கப்பட்டுள்ள ஒரு சிறுவனின் துயர்மிகு வாழக்கையை நம் கண்முன் நிறுத்தி சமூகத்தை நோக்கி அடுக்கடுக்காக கேள்விகளை தொடுக்கிறார்.

தமிழ் சமூகத்தில் ஆதி முதல் சமகால இலக்கியப் பதிவுகள் வரை 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்கிற பழமொழியின் அடிப்படையிலேயே நோய் என்கிற கருத்தாக்கம் கட்டமைக்க படுவதோடு உடல் நலமற்ற ஒருவரை 'நோயாளி', 'சீக்காளி' என்கிற ஒரு சட்டத்திற்குள் அடைத்து ஆகஇழிவாக அருவருப்பாக தீண்டத்தகாதவனாக கருதக்கூடிய ஒரு நிலையை நாம் காண முடிகிறது. இதேநிலை மேற்கத்திய சமூகங்களிலும் அதன் சாட்சிகளாக இயங்கும் இலக்கிய பிரதிகளிலும் இயல்பில் இருந்து வந்துள்ளது. ஆனால், 1980களில் நோய்கள் மற்றும் உடல் நலமின்மை குறித்த கதைகளும் கதையாடல்களும் நோய்கள் மற்றும் சிகிச்சை முறைகள் குறித்த அதீத ஆராய்ச்சி போக்குகளும் வெகுவாக முக்கியத்துவம் பெற்று அதிகரித்து வந்துள்ளன.

தனிநபரின் உடல் நலமின்மை கதையாடல்கள் வெறுமனே நோய் அனுபவங்களை பிரதிபலிப்பதாக மட்டுமல்லாது, உடல்நலமற்றவரின் துன்பியல் அனுபவங்கள், அறிகுறிகளின் அச்சுறுத்தல்கள், சிகிச்சைகளின் சிரமங்கள் ஆகியவற்றுக்கு மிகப்பெரிய அளவில் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்திருக்கிறது. 1980களில் சூசன் சாண்டாகு என்பவருடைய மிகப் பிரபலமான நூலான 'உருவகமாக உடல் நலமின்மை' என்கிற புத்தகத்தில் இப் பூமியில் பிறக்கிற ஒவ்வொருவரும் இரட்டை குடியுரிமை கொண்டவர்கள் ஒன்று உடல்நலமிக்க பேரரசு; மற்றொன்று உடல் நலம் குன்றிய பேரரசு. நாம் அனைவருமே உடல்நலமிக்க பேரரசின் கடவுச்சீட்டை பெற பெரும்பாடு படுகிறோம். ஆயினும் ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் ஏதோ ஒரு காலகட்டத்தில் உடல் நலம் குன்றிய பேரரசின் குடிமக்களாக நம்மை அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுகிறது.

உடல் நலமின்மை எல்லா மனிதர்களையும் ஏதோ ஒரு விதத்தில் மிகப்பெரிய அளவில் பாதித்து விடுவது உண்டு. அது சாதாரணமான சளி காய்ச்சலாக இருக்கலாம், ஒரு மரபுசார் நோயாக இருக்கலாம் அல்லது வாழ்வா சாவா என்கிற கொடிய நோயாக இருக்கலாம். நமக்கு எப்போதெல்லாம் உடல்நலக் குறைபாடு ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் இந்த சமூகத்தின் மைய நிலையை விட்டு தனித்து விடப்படுகிற ஒரு உணர்வு நிலையை அடைகிறோம். நம்மால் சமூகத்தினுடைய சமூக கலாச்சார நடவடிக்கைகளில் பங்குபெற முடிவதில்லை. ஒட்டுமொத்த சிந்தனையானது நம்முடைய நோயைப் பற்றி, உடல் வலியை பற்றி, அசௌகரியங்களை பற்றி சுழல்வதால் அந்த தருணங்களில் நாம் நம்முடைய சுயத்தை இழந்து நம்முடைய இயல்பான வாழ்க்கையில் இருந்து விலகிக் கொள்வதுண்டு. இப்படித்தான் உடல்நலமற்றவர்கள் சமூகத்தில் இருந்து விலக்குக்கு உட்பட்டவர்களாக மாறி விடுவதுண்டு.

இமையத்தின் இந்த நாவலில் மிகச் சாதாரணமாக வாழக்கை சுழன்று கொண்டிருக்கும் போதே திடீரென இடியாய் வந்து இறங்கி விடுகிறது இந்த சிறுவனின் உடல் நலமின்மை. இலக்கியம் காலந்தோறும் இத்தகையதொரு நோய்வாய்ப்பட்டவரை சமூகத்தின் மையத்தில் இருந்து விலகியவராக / விலக்கப்பட வேண்டியவராக பார்த்து வந்திருக்கிறது. 'உடல் நலமின்மை என்பது ஒருவிதமான பயணம் ஒரு அந்நிய நாட்டுக்கு அல்லது அங்கீகரிக்கப்படாத ஒரு அக்கம் பக்கத்துக்கு', என்கிறார் மேற்கத்திய எழுத்தாளர் வெர்ஜினியா வூல்ஃப்.

உடல்நலமற்றவர் மிகுந்த மன உளைச்சலுக்கும் நிலையற்ற சிந்தனைகளுக்கும் பல்வேறு குழப்பங் களுக்கும் உள்ளாவதோடு பதில்களற்ற பல்வேறு கேள்விகளை சுமந்துகொண்டு எத்தனை காலம் இத்தகையதொரு அயலகத்தில் தங்குவது எப்போது மீண்டும் இல்லத்திற்கு திரும்புவது என்கிற ஏக்கத்தோடு சோர்ந்த கண்களோடு நலிந்த உடல்களோடு காத்திருப்பதை நினைத்துப் பார்க்கவே வேதனையாக உள்ளது. இந்த நாவலில், சிறுவனை பரிசோதித்த டாக்டர் சிறுவனின் அம்மாவிடம் "சாப்பிட கேட்டா கொடுங்க. தண்ணி மட்டும் அதிகமா கொடுக்காதீங்க. ரொம்ப தாகமாக இருந்தால் நாக்கு மட்டும் நனைச்சு கட்டும்" என்று சொல்கிற இடம் கண்களில் கண்ணீரை வரவழைக்கிறது. சிறுவனின் தந்தை டாக்டரிடம், "அப்படின்னா என் பையன் ஆஸ்பத்திரியிலேயே கெடந்துச் சாகணுமா சார்" என்று கேட்க டாக்டர் மிகவும் கோபத்துடன், "நோய் வந்தா அதுக்காக எல்லாரும் செத்துடுவாங்களா" என்று கேட்கும்போது, "வேறுவழி இருந்தா சொல்லுங்க சார் எத்தனை கோடி செலவானாலும் பரவாயில்லை என் உயிர அடமானம் வைத்து பணத்தை கட்டுறேன்" என்று அப்பா சொல்கிற அந்த வசனங்கள் மிகுந்த வேதனையை வெளிப்படுத்துகிறது. அதுமட்டுமல்ல டிரான்ஸ் பிளான்ட் பண்ணலாம் அதாவது வேறு கிட்னி வைத்து சரிசெய்யலாம் என்று டாக்டர் சொல்லும்போது, "அப்படின்னா உடனே செய்யுங்கள் சார்; உங்கள எங்க குலதெய்வம் ஆக பாக்குறோம்" என்று சொல்கிற அந்த காட்சி கண்களை குளமாக்கி விடுகிறது.

உடல் நலமின்மை என்பது ஒரு பயணத்தின் குறியீடு. ஆனாலும், ஒரு அச்சுறுத்தலான திட்டமிடப்படாத ஒரு பயணமாகவே அதை கருதமுடியும். இப்படி நோயாளிகளின் அனுபவங்களை இலக்கியத்தில் உட்புகுத்தி சொல்லாடலாக மாற்றுகிற ஒரு கருத்து புதின எழுத்து வகையினுடைய தொடக்க காலகட்டத்தில் இருந்தே புழக்கத்தில் இருக்கிறது. எடுத்துக்காட்டாக மன நோயாளிகளின் மனநோய் குறித்த கருத்தாக்கம். இலக்கியத்தில் பல்வேறு காலகட்டங்களில் பெருங் கவிஞர்கள் ஹோமர், சர்வன்டஸ் தொடங்கி சேக்ஸ்பியரின் ஊடாக நவீன இலக்கியவாதிகளான சால் பெல்லோ வரைக்கும்

எண்ணற்ற வாசகர்களின் மனநோய் குறித்த கற்பனை கருத்தாக்கங்களுக்கு இவர்களது கதையாடல்கள் பெருமளவில் உணவளித்துஇருப்பதுதெரிந்த கதையே.

உடல் நலமின்மை குறித்த சொல்லாடல்கள் மொழியினுடைய இறுக்கங்களை, கட்டுப்பாடுகளை, இயலாமைகளை, போதாமைகளை வெளிக்காட்டுகிறது. ஆகப்பெரிய எழுத்தாளர்கள் கூட தங்களுடைய இயல்பான மொழிப் பிரயோகத்தில் இருந்து விலகி தனித்தன்மை வாய்ந்த வார்த்தைகளை சொல்லாடல்களை பயன்படுத்த நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். அவர்களால் இருக்கிற மொழியின் தன்மைகளைக் கொண்டு நோயாளியின் அனுபவங்களைஎளிதில்வெளிப்படுத்தஇயலவில்லை. ஆகவேதான், 'உடல்நலமில்லாமல் இருப்பது பற்றி' என்கிற தன்னுடைய மிகச் சக்திவாய்ந்த நூலில் வெர்ஜினியா வூல்ஃப், 'இலக்கியத்தில் உடல்நலமின்மையை சொல்வதில் மிகப்பெரிய சிக்கல் மொழியின் போதாமையே' என்கிறார்.

எடுத்துக்காட்டாக ஆங்கிலத்தில் ஹேம்லெட் மனக்கண் தோன்றுகிற அத்தனை எண்ணங்களையும் நீர்வீழ்ச்சியாக தெறிக்க விடுகிற ஆங்கில மொழி, மன்னன் லியரின் மனக்குமுறல்களை ஆழமாய் சொல்லிய ஆங்கில மொழி, ஒரு சாதாரண உடல் நடுக்கத்தையும் தலைவலியையும் சொல்வதற்கு தன்னிடத்திலே உரிய முறையான வார்த்தைகளை கொண்டிருக்கவில்லை என்பதே உண்மை.




'இப்போது உயிரோடிருக்கிறேன்' நாவலிலும் டையலிஸிஸ் போன்ற மருத்துவ சொல்லாடல்கள் அப்படியே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. நோயாளியுடன்இருப்பவர்களை இத்தகைய மருத்துவ சொல்லாடல்கள் அச்சத்துடனும் பதற்றத்துடனும் வைத்திருக்க உதவுவதோடு மருத்துவம் கற்ற சாமான்யர்கள், மருத்துவத்தை நாடி நிற்க்கும் சாதாரணமானவர் என்கிற இருமையை கட்டமைக்க உதவுகிறது. உடல் நலமின்மை கதையாடல்கள் இலக்கியத்தின் வீரியத்திற்கு வித்திட்டு இருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும்.

தாமஸ் மான், ஆல்பர்ட் காம்யூ, சுசன் சாண்டாகு போல கிருஷ்ணபிள்ளை, ஓவி விஜயன், எம்டி வாசுதேவன் நாயர், காக்க நாடன் இப்படி பலரும் பல்வேறு நிலைகளில் தங்களுடைய இலக்கியங்களில் தாங்கள் சார்ந்த சமூகத்தில் ஏற்பட்டிருக்கிற நோய்களை, நோயாளியின் அனுபவங்களை அழுத்தமாக எடுத்துச் சொல்கிறார்கள். காசநோய், தொழுநோய் போன்ற கொடிய நோய்களால் கொடுமைக்கு உள்ளாக்கப்பட்டு சமூகத்தின் விளிம்பு நிலைக்கு தள்ளப்பட்ட, அடிப்படை வசதிகள் நிராகரிக்கப்பட்ட நோயாளிகளின் துன்பியலை தெளிவாக எடுத்துச்சொல்லி இருக்கிறார்கள். ஏதோ போகிற போக்கில் நோய் மற்றும் நோயாளியின் அனுபவங்களை பிரதிபலிப்பது மட்டுமல்லாமல் நோயிலிருந்து மீண்டு வருவதற்கான சாத்தியக் தன்மையை உணர்த்துகிற ஒரு மிகப்பெரிய வலிமையை இத்தகையதொரு உடல் நலமின்மை கதையாடல்கள் தன்னகத்தே கொண்டிருப்பதை மிகவும் கண்ணியமாக உறுதிப் பட ஒவ்வொருவரும் உணர வேண்டும். அந்த விதத்தில் இமையத்தின் இந்த சிறுவன் எதிர்கொள்கிற அத்தனை தடைகளையும் தாண்டி வாழ்க்கையின் நீட்டிப்புக்காக போராடுவதை காண முடிகிறது.

காதல், போர், பொறாமை, மனிதநேயம், இயற்கையை ரசித்தல் என்று பல்வேறு விடயங்கள் இலக்கியத்தின் பிரதான கருதுகோள்களாக இடம்பிடித்த நிலையில்கூட உடல் நலமின்மை ஒரு கருதுகோளாக இலக்கியத்தில் இடம் பெறாமலேயே இருந்து வந்துள்ளது. அப்படியே ஒரு சில இலக்கியப் பிரதிகளில் உடல் நலமின்மை குறித்த உரையாடல்கள் இடம்பிடித்து இருந்தாலும்கூட அவைநோயாளிகளை விளிம்பு நிலை மனிதர்களாக, அவசியமற்றமனிதர்களாக,சமூகத்திற்கு இன்னல் விளைவிக்கிற மனிதர்களாக காட்டப்பட்டார்கள். வாழ்க்கை வெடித்து சின்னாபின்னமாகி, வலிகள், குழப்பங்கள், தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ளுதல், பல்துறை மருத்துவ முறைகளில் ஏதேனும் ஓர் நிவாரணி கிடைக்குமா என்கிற ஒரு முடிவற்ற தேடல் இவைகள் நிரம்பிப் போன ஒரு வாழ்க்கையில் சிக்கிக் கொண்டிருக்கிற ஒரு மனிதன், ஒருநாளைக்குஒருவரிஎழுதுவதென்பது மிகப் பெரிய சவால். மேலும் உடல் நலமின்மையை பிரதிநிதித்துவப்படுத்தி எழுதுகிறஇலக்கியங்களில் எழுத்தாளர்கள் ஏற்கனவே புழக்கத்தில் உள்ள இலக்கிய முறைமைகளை, வடிவங்களை, ரசனைகளை, அழகியலை பயன்படுத்த முடியாது.

உடல் நலமின்மை கதையாடல்கள் ஒரு வரையறுக்கப்பட்ட அழகியலுக்குஉட்பட்டுபுதினமாக படைத்திட முடியாது. சுருக்கமாக சொல்வதானால் வார்த்தைகள் வலிகளை சரியான விதத்தில் சொல்லி விடுமா என்ன? இவ்வாறு ஒரு சிறுநீரகக் கோளாறால் பாதிக்கப்பட்ட ஒருஇளம்சிறுவனுடைய நிலையை அழகியல் தோல்வியை கட்டியணைத்து அழகியலுக்கு எதிரான ஒரு போக்கோடு இந்த வலிகளை வாசகர்களுக்கு கடத்திச் செல்ல வேண்டிய கட்டாய சூழல் இமையத்திற்கு இருந்திருக்கும். அவருக்கே உரிய எளிய நடையில் எளிய மனிதர்களின் வாழ்வில் இத்தகைய துயர்மிகு கொடிய நோய்கள் செய்கிற துன்பியல் நிகழ்வுகளை வார்த்தைகள் கொண்டு வடித்திருந்தாலும் வாசிப்பவர்கள் அந்த வலியை உணரக் கூடிய அளவிற்கு இமையத்தின் எழுத்தானது வலிமையாக உள்ளது. இத்தகைய

நோயினால் பாதிக்கப்பட்டு இருக்கக்கூடிய மக்களை அவர்கள் மீது பிரயோகிக்கப்பட்ட சமூக கலாச்சார வன்முறையை மிகவும் ஆணித்தரமாக அழுத்தமாக பதிவு செய்திருப்பது மிகுந்த வியப்புக்குரிய ஒரு செயல்.

உடல் நலமின்மை ஏற்படுகிற ஒவ்வொரு குடும்பங்களிலும் மிகப்பெரியதொரு அறிவியல் சார்ந்த பகுத்தறிவு கருத்துக்களுக்கும் அச்சத்தின் காரணமாக ஏற்படுகிற ஆன்மீக பிரயாசைகளுக்கும் இடையிலான அந்த முரணை மிகவும் அழகாக எடுத்துச் சொல்கிறார் எழுத்தாளர் இமையம். ஒரு கட்டத்தில் அந்த சிறுவனுடைய பாட்டி அந்த சிறுவனுடைய அம்மாவிடம், "குலதெய்வம் கோயிலுக்கு குடும்பத்தோட வந்து மொட்டை போடலாம். கைநிறைய காணிக்கை செலுத்த வேண்டும்" என்று சொல்லும்போது, "குலதெய்வம் கோயில் என்ன கவர்மெண்ட் பெரிய ஆஸ்பத்திரியா?" என்று கேட்பதும், "கோயிலுக்கு போக தெரியாமயா இங்கு வந்து படுத்துக் கிடக்கிறார்கள்" என்று காட்டமாக கேள்வி எழுப்புவதையும் சிறுவன் வலிகளோடு கடக்க முற்படுவது வாசகனை திக்குமுக்காடச் செய்கிறது.

ஒரு குடும்பத்திற்குள் அமைதியை சீர்குலைக்கும் வகையில் நோய் தாக்கும்போது எப்படி பாரம்பரிய, பழமைவாத பின்னணியில் உழன்று கொண்டு இருக்கிற பெண் நபர்கள் நோயை நோய் தீர்க்கும் முறையை ஆன்மீகத்தோடு மதத்தோடு கடவுளோடு இணைத்து பார்ப்பதையும் அதற்கு நேரெதிராக பொதுவெளியில் புழங்கும் ஆண் நபர்கள் பகுத்தறிவோடு அதை எதிர்கொள்வதையும் இமையம் மிகவும் நுட்பமாக அணுகியிருக்கிறார்.

ஒவ்வொரு நோயும் ஒரு தீர்வை நிரந்தரமாக தந்து செல்வதில்லை. அதிலும் சிறுநீரகக் கோளாறு போன்ற நோய்கள் டயாலிசிஸ் என்கிற கட்டத்தை அடைந்தபோது அது ஏறத்தாழ ஒரு வாழ்நாள் சிகிச்சையாக மாற்றப்பட்டு விடுகிறது. அந்த நிலையில் நோயாளியை பார்த்துக் கொண்டிருப்பது மட்டுமே அவரை காப்பாற்றுவதற்கான ஒரு கருவியாக ஆகிவிடாது கூடவே அதற்கான பொருளாதார செலவுகளையும் எதிர்கொள்ள வேண்டிய ஒரு கட்டாய நிலைக்கு அந்த குடும்பம் தள்ளப்படுகிறது. அத்தகையதொரு நிலையில் இந்த சிறுவனுடைய அப்பா வெளியில் சென்று வரும்போது கசப்பும் வெறுப்புமாக அந்த சிறுவனின் அம்மா, "புள்ள இந்த நிலைமையில கெடக்கையில ஊர் சுத்தனுமா என்று கேட்டதும் அப்பாவுக்கு கோபம் வந்து, "ஆஸ்பத்திரியிலேயே குந்தியிருந்தா ஆஸ்பத்திரிக்கு உண்டான பில்லை உங்கப்பனா கட்டுவான்" என்று கேட்கிறார்.

நோய் சிகிச்சை ஒருபுறம் கண்ணீரை வரவழைக்கும் போது அதற்கான சிகிச்சை கட்டணத்தை சேகரிக்க மனதை கல்லாக்கிக் கொண்டு அலைந்து திரிந்து பணத்தை சேகரிக்க வேண்டிய ஒரு நெருக்கடியும் புழுக்கமும் அந்த உடல் நலமற்ற சிறுவனின் தந்தைக்கு ஏற்படுவதை மிகவும் நேர்த்தியாக சொல்லிச் செல்கிறார் இமையம். மூன்றாம் உலக நாடுகளில் மருத்துவ கட்டமைப்புகளின் போதமையை, அதன் விளைவாக ஒவ்வொரு நோய் சிகிச்சைக்குமான விலைபட்டியலை, பிழைப்பதற்கும் பொருளாதார நிலைக்குமான உறவுகளை, இமையம் ஒரு சமூக விஞ்ஞானி போல எடுத்துச் சொல்கிறார். ஒரு உடல் நலம் பாதிக்கப்பட்ட சிறுவனின் தாயாக என், "புள்ளைக்கு வந்த நோய் எனக்கு வந்திருக்க கூடாதா" என்று கேட்டுவிட்டு அம்மா லேசாக அழுகிற சத்தம் அந்த சிறுவனுக்கு கேட்டது. "எனக்கு வூடு வேணாம், காடு வேணாம், ரைஸ்மில் வேணாம், என் புள்ள மட்டும் இருந்தா போதும்" என்று சொல்லிவிட்டு அம்மா முன்னைவிட கொஞ்சம் சத்தமாக அழுவதும் கேட்கிறது. கோடி ரூபாய் செலவு ஆனாலும் செஞ்சுதான் ஆகணும் என்று அம்மா சொல்லி விட்டு அப்பாவிடம் சாப்பிட்டீர்களா என்று கேட்கும்போது, "இப்போ கவலையும் கண்ணீரும் தான் சோறு தண்ணி" என்று சொல்கிற அந்த அப்பாவின் பேச்சும்.

ஒவ்வொரு மருத்துவமனைகளிலும் நீங்காது ஒலித்துக் கொண்டிருக்கும் கூக்குரலாக 'ரிசல்ட் எப்ப வரும்' என்கிற மனித இதயத்தை பிழிகிற அந்த சொல்லாடல் இமையத்தின் 'இப்போது உயிரோடிருக்கிறேன் நாவலிலும் பரந்து கிடக்கிறது. உலகளாவிய அளவில் சுமார் 700 மில்லியன் மக்கள் சிறுநீரக கோளாறால் பாதிக்கப்பட்டு அவதியுறுகிறார்கள். நாள்தோறும் ரத்த மாற்று என்கிற டையாலீஸிஸ் க்கு கத்திருப்போர் வரிசை முடிவின்றி செல்கிறது. பன்னாட்டு நிறுவனங்களின் கட்டுப்பாட்டில் இயங்கும் அரசுகளும், அதி நவீன மருத்துவ மனைகளும், பணமிருந்தால் சிகிச்சை என்கிற மருத்துவ மந்திரமும், மரணத்துடனும் மரண பீதியுடனும் பரிதவித்து அலைகிற நோயாளிகளின் கூட்டமும் பஞ்சமின்றி இருக்கிற சமூக வெளியில் இமையம் போன்ற இலக்கியவாதிகளின் எழுத்துப் பணி இப்போது உயிரோடிருக்கிறேன் போன்று ஒரு நாவலுடன் நிறைவு பெறுவதில்லை. இமையம் விதைத்திருக்கிற உடல் நலமின்மை கதையாடல் களம் இன்னும் வீரியமாய் நோயுற்றோரின் உரிமைகளுக்காக பொதுச் சமூகத்தின் பொறுப்புணர்ச்சிக்காக தொடர்ந்து போராடும். இத்தனை காலம் சமூகத்தின் விளிம்புகளில் சிக்கி வாழ்க்கையை தொலைத்த மனிதர்களை பேசிய இமையத்தின் கதை உலகம் புதிதாக சமூக கட்டமைப்புகளில் ஒன்றான மருத்துவ உலகில் விளிம்பு நிலையில் மரணத்துடன் வாழ்ந்து வரும் எளிய மனிதர்களை பேசுகிறது. துயர்மிகு வாழ்விலிருந்து விடுதலை நாடிப் போராடும் இந்த நாவலின் சிறுவன் இயல்பு வாழக்கைக்கு மீண்டு வருவான் என்கிற நம்பிக்கை வாசகர்களின் இதயங்களில் நிரம்பியிருக்கிறது. ●

த. மார்க்ஸ்,
பேராசிரியர் – தலைவர் – ஆங்கிலத் துறை,
புதுவை பல்கலை கழகம், புதுச்சேரி

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



₹110



₹80



₹120



₹60




₹100




₹100



₹750



₹100




₹150

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 94440 70000, 044 2435 3555.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com. இணையதளம்: www. amruthamagazine. com

# கனவு

## இந்திரா பார்த்தசாரதி

'நான் கனவு காண்கின்றேனா, அல்லது நான் இன்னொருவருடைய கனவில் வரும் பாத்திரமா?'

'ஆலிஸின் அதிசிய உலகம்'

காலையில் 'வாக்கிங்' போகும்போது ஒரு காட்சியைக் கண்டேன். கையில் 'காமிரா' இருந்திருந்தால், படம் பிடித்திருப்பேன்.

இருள் பிரிந்தும் பிரியாத விடியற்காலை. ஒருவன் ஒரு வீட்டுச் சுவரோரத்தில், ஒரு மரத்தருகே நின்றுகொண்டு சிறுநீர் கழித்துக் கொண்டிருந்தான். அவன் கையில் பிடித்திருந்த 'லீஷி'ல் ஒரு நாய். தெருவை வேடிக்கைப் பார்த்தவாறு சாவகாசமாய் நின்று கொண்டிருந்தது. அப்பொழுது அந்தப் பக்கம் வந்த இன்னொரு நாய், அதன் அருகே நின்று 'குசலம்' விசாரிக்கத் தொடங்கியது. சாதாரணமாக, நாய் மரத்தருகே சிறுநாய் கழிப்பதும் அதைப் பிடித்துக் கொண்டிருக்கும் மனிதன் அந்தப் பக்கம் வரும் சிநேகிதனுடன் பேசிக் கொண்டு நிற்பதும் இயல்பான காட்சி.

ஆனால், இது வித்தியாசமாக இருந்தது. நாய் மனிதனை 'லீஷி'ல் பிடித்துக் கொண்டு உலா வந்திருக்கிறதா, அல்லது மனிதன் நாயைப் பிடித்துக்கொண்டு வந்தானா என்ற 'தோற்ற மயக்க' உணர்வா அல்லது 'கனவா' தெரியவில்லை - எனக்குள் ஏற்பட்டது.

மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வித்தியாசம், மனிதனால்தான் தூக்கத்திலும் விழிப்பு நிலையிலும் கனவு காண முடியும்; மிருகங்களுக்கு இது சாத்தியமில்லை என்று நான் சில ஆண்டுகளுக்கு முன்பு வரை நினைத்துக் கொண்டிருந்தேன். பிறகு, டால்ஃபின்களும் மனிதக்குரங்குகளும் (Primates) கூட சிக்கலான கனவுகளைக் காண முடியுமென்று விஞ்ஞானிகள் நிரூபித்தார்கள்.



சமீபத்தில், எலிகளாலும் அவர்களுடைய விழிப்பு நிலை அனுபவங்களை உறங்கும்போது, கனவுகளாகக் காண முடியுமென்று அமெரிக்கா எம்.ஐ.டியைச் சேர்ந்த டாக்டர் மாத்யூ வில்ஸன், கென்வே லூயி என்கிற இரண்டு விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். எலி, தான் பகலில் பூனையிடமிருந்து சாகசமாகத் தப்பியதைக் கனவு காணலாம், 'மிக்கி மௌஸ்' போல.

ஆகவே, பல விஷயங்களில் மனிதனுக்கும் மிருகத்துக்குமிடையே உள்ள இடைவெளி குறைந்துகொண்டே வருகிறது. ஒரு வேளை, மிருகம் மனிதனாகவும் மனிதன் மிருகமாகவும் மாறிக்கொண்டு வரலாம். நமது தொலைக்காட்சி செய்திகளைப் பார்க்கும்போதும், என்னுடைய 'வாகிங்' அனுபவத்தையும் வைத்துப் பார்க்கும்போதும், இரண்டாவதுதான் நடந்து கொண்டு வருகிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

கனவுக்கும் காதலுக்கும் நெருங்கிய உறவு உண்டு. 'கனவு நிலை உரைத்தல்' என்று வள்ளுவரே ஓர் அதிகாரம் காமத்துப் பாலில் பாடியிருக்கிறார். தலைவிக்கு நனவைக் (யதார்த்தம்) காட்டிலும், கனவே பிடித்திருக்கிறது. காரணம், கனவில் வரும் காதலன் அவளை விட்டுப் பிரிவவதில்லை. யதார்த்தத்தில் பிரிகிறான். ஆகவே, 'நனவென்ற ஒரு பாவி' என்று பரிமேலழகர் உரை எழுதுகிறார். வள்ளுவர் பிறிதோரிடத்தில், 'அழுக்காறு (பொறாமை) எனவொரு பாவி' என்று கூறியிருப்பது போல. கனவில் அவன் வந்தால் போதும், நனவில் வர வேண்டாம் என்றும் இருக்கலாம்! இது அவன் காதலனா அல்லது கணவனா என்பதைப் பொறுத்த விஷயம்.

பொதுவாகவே, யதார்த்தத்தைக் காட்டிலும் கற்பனையும் கனவுகளும்தான் கவிஞர்களுக்கு இன்பம் தர வல்லன.



யதார்த்தத்துக்கு காலம், இடம், சமூக நியதி போன்ற வரையறைகளும் கட்டுப்பாடுகளும் இருப்பதினால், சிறைவிரித்து எல்லையற்ற கற்பனைப் பெருவெளியில், மனத்தடைகளின்றிப் பறக்க இயலாது. கனவில் இது சாத்தியம். நம் உள் மனத்தில், யதார்த்தமென்ற ஒரு பாவியினால், தடைகளுக்கு உட்பட்டிருக்கும் வரம்பற்ற ஆசைகளும் ஆதங்கங்களும் கனவு நிலையில் விழித்தெழுகின்றன. உடம்பு உறங்குகின்றது. உள்மனத்துக்கு ஓய்வில்லை.

'யதார்த்தத்தில், சமூக நியதியின் காரணமாக, மனிதன் தன்னுடைய இயல்பான ஆசைகளையும் எண்ணங்களையும் அடக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது; அடக்கப்பட்ட உணர்வுகள் உறக்கத்தின்போது தங்களைப் பலவிதமான குறியீடுகள் மூலம் அறிவித்துக் கொள்கின்றன. இவைகள்தாம் கனவுகள். இவற்றின் ஆதாரத் தாயகம், பாலுணர்வு (Sex)' என்று சிக்மன்ட் ஃப்ராய்ட் கூறுகிறார்.

ஆனால், அவருடைய ஒரு காலத்திய சிஷ்யர், கார்ல் யூங் கருத்தின்படி, 'தொடர்ந்து வரும் ஒரு சமூக மரபுப் பிரக்ஞையின் வெளியீடுகளாகிய தொன்மங்களின் (Myths) குறியீட்டு (Symbolic) நினைவுகளாகவும் கனவுகள் இருக்கக் கூடும்' என்பதுதான். 'A dream is one's private myth and a myth is a public dream' என்கிறார் அவர்.

உதாரணமாக. சமூக நாடோடிக் கதையாக வழங்கும் 'ஜெகதலப் பிரதாபன்' வரலாற்றில், ஜெகதலப் பிரதாபன் ஒடுக்கப்பட்ட ஓர் இனத்தில் பிறந்த ஏழை இளைஞன். அவன் கனவு காண்கின்றான். என்ன கனவு? 'சொர்க்க உலகில், இந்திரகுமாரி இன்னிசைப் பாட, வருணகுமாரி கால்களை வருட, மலர் மஞ்சத்தில் அவன் பள்ளிகொண்டு, வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும்' என்று. அவன் கனவாகிய அந்தரங்கத் தொன்மம், ஒடுக்கப்பட்ட அனைத்து இளைஞர்களின் கனவுக் குறியீடாக மாறி, தொன்மக் கதையாக உருப் பெறுகிறது. இதுவே அக்குறிப்பிட்ட சமூகத்தின் பகிரங்கக் கனவும் ஆகும்.

கனவு காணப் பெண்களுக்கும் உரிமை உண்டு என்பது போல, பாகவதத்தில் ஓர் அசுரப் பெண்ணும் கனவு காண்கின்றாள். பாணாஸ்வரனின் மகள் உஷா. ஓர் அழகிய இளைஞன் அவள் கனவில் வருகின்றான். அவன் கிருஷ்ணனுடைய பேரன் அனிருத்தன். பிரத்யுமனனின் மகன். அனிருத்தன் மீது காதல் கொள்கின்றாள் உஷா.

அனிருத்தன் தூங்கும்போது, அவன் கனவில் புகுந்து, அவனைக் கடத்திக்கொண்டு வந்துவிடுகிறாள் அவள் தோழி சித்திரலேகா. பின் நவீனத்வக் கதைகள் பாகவதத்திலிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.



கனவில், அவன் கொன்ற அனைவரும் வரிசையாக வருகிறார்கள்.

பண்டைய கிரேக்கக் கதைகளில், நிக்ஸ் என்ற இரவின் தெய்வம், ஹிப்னாஸ் (உறக்கம்), தனடோஸ் (மரணம்) என்ற இரட்டைப் பிள்ளைகளை ஈன்றெடுப்பதாகக் கூறப்படுகின்றது. ஹிப்னோஸ், மார்ஃபியஸ் என்ற கனவுகளுக்குரிய பெண்ணின் தந்தையாகக் குறிப்பிடப்படுகிறார். இந்தப் பெண்ணைச் சூழ்ந்திருப்பவை அபின் செடிகள்! கனவுக்கும் அபினுக்கும் உள்ள சம்பந்தததை இது காட்டுகிறது!

தமிழ்ப் பெண் ஒருத்தியும் கனவு காண்கின்றாள். அவள் கனவு பேரனைப் பற்றியதன்று; தாத்தாவைப் பற்றியது. அந்தத் தாத்தாவின் விசேஷம் என்னவென்றால் அவர் என்றும் இளைஞன்! அவன்தான் கிருஷ்ணன். அவனை மணமகனாக வரித்து, அவனுடன் திருமணம் செய்துகொள்வதாகக் கனவு கண்டவள், சூடிக் கொடுத்த நாச்சியார் என்றறியப்படும் ஆண்டாள். ஒரு திருமணப் பெருவிழா, இந்தக் காலத்து வீடியோ படக் காட்சிகள் போல், ஆண்டாளின் மனக்கண் முன், கனவாக விரிகின்றது.

நடக்க இருக்கும் திருமணத்தை முன் கூட்டியே அறிவிக்கின்றது இக்கனவு.

கம்ப ராமாயணத்தில் அசோக வனத்தில் சிறை யிருந்த சீதையின் துயரைப் போக்க, தான் கண்ட கனவை அவளுடன் பகிர்ந்துகொள்கிறாள் திரிசடை என்ற ஒரு பெண். வால்மீகி ராமாயணத்திலும் திரிசடை வருகின்றாள். ஆனால், அவளை ஒரு வயதான அரக்கியாகக் காட்டி, அவள் தன் கனவை மற்றைய அரக்கிகளுடன் பகிர்ந்துகொள்வதாகச் சொல்லுகிறார் வால்மீகி. கம்பனின் இலக்கிய மந்திரக் கோல் அவளை விபீஷனணின் மகளாகவும் சீதையின் உற்ற தோழியாகவும் காட்டுகிறது. அவள் சித்திரிக்கும் அவள் கனவு, சீதையின் வேதனையைத் தீர்க்கும் மாய மந்திரமாக ஆகிவிடுகின்றது!

ஷேக்ஸ்பியர் நாடகங்களில், கனவுகள் ஒரு முக்கிய பங்கை வகிக்கின்றன. ஜூலியஸ் ஸீஸரில், ஸீஸரை ஸெனட் கூட்டத்துக்குப் போக வேண்டாமென்று தடுக்கிறாள் அவன் மனைவி கலிஃபூர்னியா. காரணம், அவள் முதல் நாளிரவு தீக்கனா காண்கின்றாள். அவன் அவள் சொல்வதை மீறிச் செல்கிறான், கொல்லப்படுகிறான். கொடுங்கோல் மன்னனாகக் காட்டப்படும் மூன்றாம் ரிச்சர்ட் போரில் கொல்லப்படுவதற்கு முன்னால் அவன் காணும்

உறக்கத்தையும் மரணத்தையும் இரட்டைக் குழந்தைகளாகக் கூறுவது, இரண்டிற்கும் வேறுபாடு இல்லை என்று சொல்வது போல் இருக்கிறது. ‘ஹாம்லெட்’டில், டென்மார்க் இளவரசன் கூறுகிறான்: ‘மரணம் எனும் அப்பெரும் தூக்கத்தில் எந்த மாதிரியான கனவுகள் வருமோ, நினக்கவே பயமாக இருக்கிறது!’

வள்ளுவரின் கருத்தோட்டம் இந்த விஷயத்தில் ஆக்கப் பூர்வமாக (Positive) இருப்பதைப் பார்க்கலாம் உறக்கம் › மரணம் › பிறப்பு என்பது அவர் பார்வை. மரணம் ஒரு முடிவன்று. அதைத் தொடர்வது பிறப்பு. இந்நிலையில் அனைத்துமே கனவாகத் தோன்றுவதில் ஆச்சர்யமில்லை... ‘நாம் அனைவருமே தூக்கத்தில் முடியப் போகும் கனவுகள்’ என்கிறார் ஷேக்ஸ்பியர் இன்னொரு நாடகத்தில்.

அபினுக்கும் கனவுக்குமுள்ள தொடர்பை வலியுறுத்துவது போல், கோல்ரிட்ஜ் என்ற ஆங்கிலக் கவிஞர், ‘குப்ளாக்கான்’ என்ற ஓர் அற்புதமான கவிதை எழுதியிருக்கிறார். அவரே இக்கவிதை அபின் மயக்கத்தில் எழுதப்பட்ட கவிதை என்பதை ஒப்புக்கொள்கிறார். இக்கவிதை, பாரதியின், ‘குயில் பாட்டு’ப் போல, ‘பட்டப் பகலில் பாவலர்க்குத் தோன்றுவதாம் ஓர் நெட்டைக் கனவு’.

அரசியல் கனவுகளும் இருக்கின்றன. அமெரிக்கக் கறுப்பர்களின் தாரக மந்திரம், ‘எனக்கொரு கனவு உண்டு’ (I have a dream) என்ற ஒரு கூற்றுதான். மார்டின் லூதர் கிங் (ஜூனியர்) கண்ட இக் கனவு, வெள்ளை மாளிகையில், ஒரு கறுப்பு இனத்தவரை அரியணையில் ஏற்றி வைத்தது. ●

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

